ஸ்ரீ:



ஸ்ரீமதே ராமாநுஜாய நம: ஸ்ரீமத் வரவரமுநயே நம:

# ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாமம்

## (2011 நாட்காட்டி - இணைப்புப் புத்தகம்)

தொகுத்தவர் :

வேளுக்குடி ஸ்ரீ உ.வே. க்ருஷ்ணன் ஸ்வாமி






ஸ்ரீ:



ஸ்ரீமதே ராமாநுஜாய நம: ஸ்ரீமத் வரவரமுநயே நம:




# ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாமம்

ஆயிரம் திருநாமங்களுக்கு சுருக்கமான பொருள்

தொகுத்தவர் :

**வேளுக்குடி ஸ்ரீ உ வே க்ருஷ்ணன் ஸ்வாமி**

நாட்காட்டி 2011 – இணைப்புப் புத்தகம்

பதிப்பு : ஜனவரி 2011

பிரதிகள் : 1,00,000

இப்புத்தகத்தில் கொடுக்கப்பட்டிருக்கும் ஆயிரம் திருநாமங்களின் பொருள் ஸ்ரீ பராசர பட்டர் அருளிய "ப$_4$க$_3$வத்$_3$ கு$_3$ண த$_3$ர்பணம்" என்ற உரையைத்தழுவி எழுதப்பட்டது. மேலும், மணலூர் வீரவல்லி ஸ்ரீ உ.வே. ராமாநுஜாசார்யர் ஸ்வாமி, ஞானபக்தி பூஷண ஸ்ரீ உ.வே. சத்யமூர்த்தி அய்யங்கார் ஸ்வாமி, டாக்டர். ஸ்ரீ உ. வே. V.V. ராமாநுஜம் ஸ்வாமி ஆகியோர் வெளியிட்ட ஸ்ரீவிஷ்ணு ஸஹஸ்ரநாம பொருள் விளக்க புத்தகங்களின் உதவியைக் கொண்டு இப்புத்தகம் எழுதப்பட்டது. இவர்கள் செய்த பேருதவிக்கு அடியோங்களுடைய நன்றியை தெரிவித்துக்கொள்கிறோம்.

இப்புத்தகம் மற்றும் நாட்காட்டியுடன் வேளுக்குடி ஸ்ரீ உ.வே. க்ருஷ்ணன் ஸ்வாமியின் 160 மணி நேர ஸ்ரீவிஷ்ணு ஸஹஸ்ரநாம உபன்யாஸங்கள் உள்ள 2 MP3.CD க்கள் இணைப்பாக கொடுக்கப்பட்டுள்ளது. இவை ஓர் நேர்முக ஒலிப்பதிவு, 7 வருடங்களுக்கு முன் ஒலிப்பதிவு செய்யப்பட்டுள்ளதால் தற்பொழுது இருக்கும் உயர்தரம் இராது. பொறுத்துக்கொள்ள வேண்டுகிறோம்.

வெளியிடுவோர்:

**கிஞ்சித்காரம் அறக்கட்டளை,** நெ.6, பீமசேனா கார்டன் தெரு, மைலாப்பூர், சென்னை–600004.
தொலைபேசி: 044–2499 2728

அச்சிட்டோர்:

**ஆர் என் ஆர் பிரிண்டர்ஸ்,** நெ.19, தாண்டவராயன் தெரு, திருவல்லிக்கேணி, சென்னை–600005.
தொலைபேசி: 044–2844 1856



ஸ்ரீ:

# ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாமப் பொருள்

குணத்தால் நிறைந்தவன்; எங்கும் பரந்து ஆள்பவன்

1. விஶ்வம் – மங்களமான குணங்களால் முழுதும் நிரம்பியவர்.
2. விஷ்ணு: – அனைத்துக்குள்ளும் நுழைந்து நீக்கமற நிறைந்திருப்பவர்.
3. வஷட்கார: – அனைத்தையும் தாம் நினைத்தபடி நடத்தி தன் வசத்தில் வைத்திருப்பவர்.
4. பூ4தப4வ்யப4வத்ப்ரபு4: – முக்காலங்களிலும் உள்ளவர்களுக்கெல்லாம் ஸ்வாமி; தலைவர்.

தானே உலகெல்லாம்; தானே படைத்து அழித்துக் காப்பவன்

5. பூ4தக்ருத் – தன் நினைவாலேயே அனைத்தையும் படைப்பவர்.
6. பூ4தப்4ருத் – படைத்த அனைத்தையும் தானே தாங்குபவர்.
7. பா4வ: – ப்ரபஞ்சத்தையே தன்னை விட்டுப் பிரியாமல் சார்ந்திருப்பதாகக் கொண்டவர்; மயிலுக்குத் தோகைபோல்.
8. பூ4தாத்மா – அனைத்துக்கும் ஆத்மாவாக இருப்பவர். அனைத்தும் அவருக்கு உடல்.
9. பூ4தபா4வந: – அனைத்தையும் பேணி வளர்ப்பவர். ஆகையால் அவரே தலைவர்.



குற்றமற்றவன்; ஒப்பிலி அப்பன்

10. பூதாத்மா - தூய்மையானவர்; தனக்கு உடலாய் இருக்கும் சித் மற்றும் அசித்துக்களின் குற்றங்கள் தீண்டாதவர்.

11. பரமாத்மா - அனைவருக்கும் ஆத்மாவாக இருப்பவர். தனக்கு ஒரு ஆத்மா இல்லாதவர்.

முக்தர்களால் அடையத் தகுந்தவன்

12. முக்தாநாம் பரமாக₃தி: - முக்தர்கள் இறுதியாக விரும்பி அடையும் இடமாய் இருப்பவர்.

13. அவ்யய: - யாரும் தம்மை விட்டுவிலகாமல் இருப்பவர். வைகுந்தத்தை அடைந்தவன் திரும்புவதில்லை.

14. புருஷ: - முக்தர்களுக்குத் தன்னையும் தன் குணங்களையும் பேராநந்தத்தோடு அநுபவிக்கக் கொடுப்பவர்.

15. ஸாக்ஷீ - மகிழும் முக்தர்களை நேரே கண்டு மகிழ்பவன்.

16. க்ஷேத்ரஜ்ஞ: - முக்தர்கள் தம்மோடு மகிழும் நிலமான வைகுந்தத்தை அறிந்திருப்பவர்.

17. அக்ஷர: - முக்தர்கள் எத்தனை அநுபவித்தாலும், குணங்களால் குறையாதவன்.

முக்திக்கு வழி

18. யோக₃: - முக்தியை அடைவிக்கும் வழியாகவும் (உபாயமாகவும்) இருப்பவர்.

19. யோக₃விதா₃ம் நேதா - வேறு உபாயமாகிற பக்தியோகத்தைச் செய்பவர்களை வழிநடத்துப்பவர்.

20. ப்ரதா₄ந புருஷேஶ்வர: - மூல ப்ரக்ருதிக்கும், அதில் கட்டுண்ட ஜீவர்களுக்கும் தலைவர்.



அனைத்தும் தானே: ஆனால் அவற்றிலும் உயர்ந்தவன்

21. நாரஸிம்ஹவபு: - நிகரற்ற நரங்கலந்த சிங்க உருவமாகப் பிறந்தவர்.
22. ஸ்ரீமாந் - ஒளிமிக்க, மனித சிங்க உருவங்கள் பொருந்திய, அழகிய திருமேனி உடையவர்.
23. கேஶவ: - இவ்வுருவில் அழகிய திருக்குழலும், பிடரியும் உடையவர்.
24. புருஷோத்தம: - பத்தர், முக்தர், நித்யர் ஆகிய மூவகை ஆத்மாக்களை விட உயர்ந்தவர்.
25. ஸர்வ: - அனைத்துப்பொருட்களையும் தன் உடலாகக் கொண்டு, அவற்றை நடத்துபவர்.
26. ஶர்வ: - தன் உடலாக இருக்கும் அனைத்தின் தீமைகளையும் விலக்குபவர்.
27. ஶிவ: - மங்களமாக இருப்பவர். அனைவருக்கும் மங்களத்தைக் கொடுப்பவர்.
28. ஸ்தா$_2$ணு: - அடியார்களுக்கு நிலைநின்ற பயனைக் கொடுப்பதில் ஸ்திரமானவர்.
29. பூ$_4$தாதி$_3$: - அனைத்துப் ப்ராணிகளாலும் இறுதியான பயனாக அடையப்படுபவர்.
30. நிதி$_4$ரவ்யய: - எத்தனை பயன்படுத்தினாலும் அழியாத செல்வம்.
31. ஸம்ப$_4$வ: - புதையல்போல் மறைந்திருந்து, சரியான நேரத்தில் அடியார்களுக்காக அவதரிப்பவர்.
32. பா$_4$வந: - அவதரிக்கும்போது அடியார்கள் துன்பங்களை நீக்கிக் காப்பவர்.
33. ப$_4$ர்த்தா - தன்னையே அளித்துத் தாங்குபவர்.
34. ப்ரப$_4$வ: - அவனை நினைத்தாலே பாபங்களைப் போக்கும் குற்றமற்ற சிறந்த பிறப்பை உடையவர்.



35. ப்ரபு$_4$: - மனிதனான எளிய பிறப்பிலும் சிந்தயந்தீ, ஶிஶுபாலன் போன்றோர்க்கு முக்திகொடுத்த மேன்மையுடையவர்.

36. ஈஶ்வர: - எளியவராகப் பிறந்தபோதும் அனைவரையும் ஆள்பவர்.

37. ஸ்வயம்பூ$_4$: - வினைகளின் பயனாகப் பிறவாமல், தன் கருணை மற்றும் விருப்பத்தினால் பிறப்பவர்.

38. ஶம்பு$_4$: - தன் அழகாலும் பண்புகளாலும் அடியார்களுக்குப் பெருக்கெடுக்கும் இன்பத்தை அளிப்பவர்.

39. ஆதி$_3$த்ய: - ஸூர்யமண்டலத்தின் நடுவே இருப்பவர்; உருக்கிய தங்கம் போலத் திகழ்பவர்.

40. புஷ்கராக்ஷ: - தாமரைக்கண்ணன்; இவரே முழுமுதற்கடவுள் என்பதற்கு இதுவே அடையாளம்.

41. மஹாஸ்வந: - உயர்ந்த ஒலியை உடையவர், அதாவது வேதங்களால் போற்றப்படுபவர்.

42. அநாதி$_3$நித$_4$ந: - முதலும் முடிவும் அற்றவர்.

43. தா$_4$தா - உலகைப் படைக்க முதலில் நான்முகனைத் தன் கர்பமாகப் படைத்தவர்.

44. விதா$_4$தா - பிரமனாகிய கர்பத்தை வளர்த்து உத்பத்தி செய்பவர்.

45. தா$_4$துருத்தம: - நான்முகனைக் காட்டிலும் உயர்ந்தவர்.

46. அப்ரமேய: - புலன்களுக்கு அளவிடமுடியாதவர்; தெய்வங்களுக்கும் அரியவர்.

47. ஹ்ருஷீகேஶ: - அனைவருடைய புலன்களையும் ஆளும் தலைவர். இன்பமும், நலமும், செல்வமும் பொருந்தியவர்.

48. பத்$_3$மநாப$_4$: - நான்முகனின் பிறப்பிடமான தாமரையை உந்தியில் உடையவர்.



49. அமரப்ரபு₄: - தெய்வங்களுக்குத் தலைவனாய், அவர்களைப் படைப்பு, அழிப்பு ஆகிய தொழில்களில் நடத்துபவர்.

50. விஶ்வகர்மா - பிரமனைப் படைப்பதற்கு முன்னும் பின்னும் அனைத்து செயல்களையும் செய்பவர்.

51. மநு: - ஸங்கல்பிப்பவர்; தன் நினைவின் சிறுபகுதியாலேயே ப்ரபஞ்சத்தைப் படைப்பவர்.

52. த்வஷ்டா - ப்ராணிகளைப் பெயரோடும் உருவத்தோடும் செதுக்குபவர்.

53. ஸ்த₂விஷ்ட₂: - விரிவானவர்; ப்ரளயத்தின்போது நுண்ணியதாக இருந்த சித் அசித்துக்களாலான தன் உடலைப் படைப்பின்போது விவரிப்பவர்.

54. ஸ்த₂விர: - எக்காலத்திலும் நிலைத்திருப்பவர்; மாறுதல் இல்லாதவர்.

55. த்₄ருவ: - தன் உடலையே படைப்பின்போது ப்ரபஞ்சமாக விரித்தாலும், இயற்கை நிலையில் மாறுதல் அற்றவர்.

56. அக்₃ராஹ்ய: - யாருடைய உணர்தலுக்கும் அப்பாற்பட்டவர். புத்தியால் பிடிக்க முடியாதவர்.

57. ஶாஸ்வத: - படைத்தல், காத்தல், அழித்தல் ஆகியவை விடாமல் தொடர்வதால் ஓய்வில்லாதவர்.

58. க்ருஷ்ண: - முத்தொழில் விளையாட்டாலேயே இன்புறுபவர்.

59. லோஹிதாக்ஷ: - இவ்விளையாட்டாலேயே சிவந்து மலர்ந்த கண் உடையவர்.

60. ப்ரதர்த₃ந: - ப்ரளயத்தின்போது அனைத்தையும் அழித்து, தன்னுள் ஒடுக்குபவர்.

61. ப்ரபூ₄த: - உலகமே அழிந்தபோதும் நிலையான வைகுந்தச் செல்வத்தால் நிரம்பியவர்.



62. த்ரிககுத்$_3$தா$_4$மா – அழியும் விளையாட்டு உலகத்தைவிட (லீலா விபூதி) மும்மடங்கு பெருத்த வைகுந்தத்தை (நித்ய விபூதி) உடையவர்.

62. பவித்ரம் – குற்றமற்ற தூய்மையானவன்.

64. மங்க$_3$ளம்பரம் – தீமைகளுக்கு எதிரான சிறந்த மங்களங்களின் இருப்பிடம்.

பத்த முக்த நித்யர்களைக் காட்டிலும் உயர்ந்தவன்

65. ஈஶாந: – ப்ரபஞ்சத்தை ஆட்சிசெய்பவர்.

66. ப்ராணத$_3$: – உயிரளிப்பவன்; நித்யஸூரிகளுக்குத் தன்னை அநுபவித்துத் தொண்டுபுரிய சக்தியை அளிப்பவர்.

67. ப்ராண: – உயிராய் இருப்பவர்; நித்யஸூரிகளுக்கு உயிர்போலப் ப்ரியமாய் இருப்பவர்.

68. ஜ்யேஷ்ட$_2$: – அனைத்துக்கும் முன்னோனானபடியால், முதியவன்.

69. ஶ்ரேஷ்ட$_2$: – நித்யர்களாலே துதி செய்யப்படும் சிறந்தவர்.

70. ப்ரஜாபதி: – நித்யர்களுக்குப் பதியானவர்; அவர்கள் தொண்டை ஏற்றுக்கொள்பவர்.

71. ஹிரண்யக$_3$ர்ப$_4$: – தூய ஸத்வமயமான பொன்னுலகம் என்னும் வைகுந்தத்தில் வஸிப்பவர்.

72. பூ$_4$க$_3$ர்ப$_4$: – தன் மனைவியான பூமாதேவியை கர்பத்தைப்போல் பாதுகாப்பவர். வராஹாவதாரம் செய்து கடலில் நின்றும் இடந்து எடுத்தவர்.

73. மாத$_4$வ: – ஸ்ரீமஹாலக்ஷ்மியின் கணவர். அவளை விட்டுக் கணநேரமும் பிரியாதவர்.



74. மது$_4$ஸூத$_3$ந: - மது என்னும் அஸுரனை அழித்தவர். அதுபோல் அனைத்துத் தீமைகளையும் ஒழிப்பவர்.

75. ஈஶ்வர: - தடங்கலற்ற ஆட்சி புரிபவர்; அனைத்து ஸங்கல்பங்களையும் முடிப்பவர்.

76. விக்ரமீ - மிக்க திறலுடையவர். எதிர்க்கும் அனைத்தையும் ஒழிக்க வல்லவர்.

77. த$_4$ந்வீ - ஶார்ங்கம் என்னும் வில்லைப் பிடித்த தன்னிகரற்றவர்.

78. மேதா$_4$வீ - தன் பெருமைக்குத் தக்க ஸர்வஜ்ஞர் (அனைத்தையும் அறிபவர்).

79. விக்ரம: - வேதவடிவமான கருடனை வாகனமாகக் கொண்டு, தன் விருப்பப்படி செல்பவர்.

80. க்ரம: - பரமபதத்தில் செழிப்பானவர்; எங்கும் நிறைந்திருப்பவர்.

81. அநுத்தம: - தனக்கு மேற்படி யாரும் அற்றவர்.

82. து$_3$ராத$_4$ர்ஷ: - கடல்போல் ஆழமானவர். ஆகையால் கடக்கவோ கலக்கவோ வெற்றிகொள்ளவோ முடியாதவர்.

83. க்ருதஜ்ஞ: - செய்நன்றி அறிபவர். நாம் செய்யும் சிறுபூசையையும் நினைவில் கொள்பவர்.

84. க்ருதி: - அடியார்களை தர்மத்தில் தூண்டும் சக்தியாய் இருப்பவர்.

85. ஆத்மவாந் - தர்மம் செய்யும் ஆத்மாக்களை தனக்குச் சொத்தாகக் கொண்டவர்.

86. ஸுரேஶ: - தேவர்களுக்குத் தலைவர்; ப்ரஹ்மா முதலான தேவர்களையும் ஆட்சி செய்பவர்.



ஆறும் பேறும் அவனே; மருந்தும் விருந்தும் அவனே

87. ஶரணம் - அனைவருக்கும் உபாயம் (தன்னை அடைய தானே வழியாய் இருப்பவர்).

88. ஶர்ம - ஸுகரூபமானவர்; தானே இனிய பயனாக இருப்பவர்.

89. விஶ்வரேதா: - ப்ரபஞ்சத்துக்கு முதற்காரணமாய் இருப்பவர். உடலையும் புலன்களையும் தன் தொண்டுக்காகவே படைப்பவர்.

90. ப்ரஜாப₄வ: - அவர் கொடுத்த உடலையும் புலன்களையும் கருவிகளாகக் கொண்டு அவரைச் சேரும்படி இருப்பிடமானவர்.

91. அஹ: - தன்னைப் பற்றியவன் தீய கதிகளுக்குச் செல்லாதபடி செய்பவன்; அறிவின்மையாகிற நெடுந்துயில் நீங்கும்போதே பகல்போல இருப்பவர்.

92. ஸம்வத்ஸர: - அடியார்களைக் கைதூக்கிவிட அவர்கள் உள்ளத்திலேயே உறைபவர். அவர்களுக்குக் கரையேற புத்தியைக் கொடுப்பவர்.

93. வ்யால: - அடியார்களை அஞ்சேல் என்று சொல்லி ஏற்றுக்கொள்ள, தன் ப்ரதிநிதியை அனுப்புபவர்.

94. ப்ரத்யய: - அப்படி ஏற்றுக்கொள்ளப்படுபவர்களால் நம்பத்தகுந்தவர்.

95. ஸர்வத₃ர்ஶந: - ஏற்றுக்கொள்ளப்பட்டவர்களுக்குத் தன் பெருமையைக் காட்டுபவர்.

96. அஜ: - அவர்கள் தன்னைக் கிட்டுவதற்கு இடையூறாக இருக்குமவற்றை தானே விலக்குபவர்.

97. ஸர்வேஶ்வர: - ஶரணாகதர்களை தகுதி பார்க்காமல் தாமே சடக்கென அடைபவர்.



98. ஸித்₃த₄: - தன்னை அடைவதற்கு வேறு வழிகள் தேவையல்லாமல் தானே தயாரான வழியானவர்.

99. ஸித்₃தி₄: - அனைத்து தர்மங்களாலும் அனைவராலும் அடையப்படும் பயனாக இருப்பவர்.

100. ஸர்வாதி₃: - உயர்ந்த மற்றும் தாழ்ந்த, அனைத்துப் பயன்களுக்கும் மூலமாய் இருப்பவர்.

101. அச்யுத: - சரணடைந்தோர்களை விட்டு நீங்காதவன்.

102. வ்ருஷாகபி: - தர்மத்தின் உருவமாக வராஹமாகப் பிறந்தவர்.

103. அமேயாத்மா - தன் அடியார்களுக்கு எவ்வளவு செய்தார் என்று அளவிட முடியாதவர்.

104. ஸர்வயோக₃ விநிஸ்ருத: - அனைத்து உபாயங்களாலும் அடையப்படுபவர்.

105. வஸு: - சிறிது அன்புகாட்டுபவனிடத்தும் வஸிப்பவர்.

106. வஸுமனா: - பக்தர்களை விலைமதிப்பில்லாத செல்வமாகக் கொள்பவர்.

107. ஸத்ய: - தன் அடியார்களின் விருப்பத்தை நிறைவேற்றுபவர்.

108. ஸமாத்மா - ஏற்றத்தாழ்வு இல்லாமல் அனைவரையும் ஸமமாகக் கருதுபவர்.

109. ஸம்மித: - அடியார்களுக்கு அடங்கியவர்.

110. ஸம: - ஶரணமடைந்தவர்களுள் புதியவர், பழையவர் என்று வேறுபாடு பார்க்காதவர்.

111. அமோக₄: - தன்னுடைய தொடர்பு வீணாகாதவன், பக்தி வீணாவது இல்லை.

112. புண்ட₃ரீகாக்ஷ: - புண்டரீகம் என்னும் வைகுந்தத்தில் உள்ளோர்க்குக் கண் போன்றவர்.



113. வ்ருஷகர்மா – நம்மை நன்னெறிப்படுத்தும் தர்மமான செயல்களை உடையவர்.

114. வ்ருஷாக்ருதி: – தர்மமே உருவானவர், அமுதம் போன்ற குளிர்ந்த உரு உடையவர்.

115. ருத்ர: – பக்தர்கள் நெஞ்சுருகி ஆனந்தகண்ணீர் விட வைப்பவர்.

116. பஹுஶிரா: – ஆதிசேஷனைப்போல் எண்ணிறந்த தலைகள் உடையவர்.

117. பப்ரு: – ஆதிசேஷ உருவில் உலகைத் தாங்குபவர்.

118. விஶ்வயோநி: – தம்மை அடைந்தவர்களை நெருக்கமாகக் கூட்டி கொள்கிறவர்.

119. ஶுசிஶ்ரவா: – தன் பக்தர்களின் இனிய தூய்மையான சொற்களைக் கேட்பவர்.

120. அம்ருத: – முக்தி அளிக்கும் ஆராத அமுதமானவர்.

121. ஶாஶ்வதஸ்தாணு: – தேவ லோகத்து அமுதம்போல் அல்லாமல் நிலையானவர்.

122. வராரோஹ: – மிகச்சிறந்த அடையும் பொருளாக இருப்பவர்.

ஆறு குணங்கள்

123. மஹாதபா: – அளவற்ற ஜ்ஞானம் உடையவர் (1/6).

124. ஸர்வக: – ஸம்ஹரிக்கப்பட்ட அனைத்தையும் தன்னிடம் தாங்கும் பலமுடையவர் (2/6).

125. ஸர்வவித்: – மறுபடியும் படைத்து ப்ரபஞ்சத்தையே அடையும் செல்வம் உடையவர் (3/6).

126. பாநு: – உலகத்தையே படைக்கும்போதும் தான் மாறுதல் இல்லாத (விகாரம் இல்லாத) வீர்யம் படைத்தவர் (4/6).



127. விஷ்வக்ஸேநः - உலகையே காக்கும் ஸேனையை உடைய சக்தி படைத்தவர் (5/6).

128. ஜனார்த₃நः - அடியார்களைக் காக்கும்போது எதிர்த்தவர்களை வேறு உதவி தேடாமல் அழிக்கும் தேஜஸ் உடையவர் (6/6).

மூவரின் முத்தொழில்கள்

129. வேத₃: - வேதங்களை அளிப்பவர்.

130. வேத₃வித் - வேதத்தின் ஆழ்பொருளை ஐயமின்றி அறிபவர்.

131. அவ்யங்க₃: - ஶிக்ஷை, வ்யாகரணம், சந்தஸ், நிருக்தம், ஜ்யோதிஷம், கல்பம் ஆகிய வேதத்தின் ஆறு அங்கங்களால் குறைவற்று இருப்பவர்.

132. வேதா₃ங்க₃: - வேதத்தைத் தனக்குத் திருமேனியாக உடையவர்.

133. வேத₃வித் - வேதத்தைக்கொண்டு அறியபடுபவர்; வேத தர்மங்களைக் கடைப்பிடிக்கச் செய்து அதனால் அடையப்படுபவர்.

134. கவிः - அனைத்தையும் எதிர்காலச் சிந்தனையோடு பார்ப்பவர்.

135. லோகாத்₄யக்ஷ: - தர்மத்தைச் செய்யும் தகுதியுள்ள மனிதர்களை அறிபவர்.

136. ஸுராத்₄யக்ஷ: - அவர்களால் பூசிக்கப்படும் தேவர்களை அறிபவர்.

137. த₄ர்மாத்₄யக்ஷ: - வழிமுறைகளான தர்மங்களையும் அறிபவர், அதற்குரிய பயனை அறிந்துகொள்பவன்.



138. க்ருதாக்ருத: - இவ்வுலக மற்றும் அவ்வுலகப் பயன்களை அளிப்பவன்.

நால்வரின் நான்கு தன்மைகள்

139. சதுராத்மா - வாஸுதேவ, ஸங்கர்ஷண, ப்ரத்யும்ந, அநிருத்தர் என்று நான்கு உருவங்களை உடையவர்.

140. சதுர்வ்யூஹ: - விழிப்பு, கனவு நிலை, ஆழ்ந்த உறக்கம், முழு உணர்தல் ஆகிய நான்கு நிலைகளிலும் இருப்பவர்.

141. சதுர்த₃ம்ஷ்ட்ர: - பரவாஸுதேவ உருவத்தில் நான்கு கோரைப்பற்களை உடையவர்; இது மஹாபுருஷனுக்கு அடையாளம்.

142. சதுர்பு₄ஜ: - பரவாஸுதேவ உருவத்தில் நான்கு கைகளை உடையவர்.

143. ப்₄ராஜிஷ்ணு: - தன்னை உபாஸிப்பவர்களுக்கு ஒளிவிடுபவர்.

144. போ₄ஜநம் - பக்தர்களால் இனிய உணவாக இன்பமாக அநுபவிக்கப்படுபவர்.

145. போ₄க்தா - பக்தர்கள் ஸமர்ப்பிக்கும் அமுதம்போன்ற பாயசம் முதலானவற்றை அன்போடு ஏற்று உண்பவர்.

146. ஸஹிஷ்ணு: - தன் பக்தர்கள் அறிந்தும் அறியாமலும் செய்த குற்றங்களைப் பொறுப்பவர்.

ஸ்ரீமஹாவிஷ்ணு (முதல் அவதாரம்)

147. ஜக₃தா₃தி₃ஜ: - மும்மூர்த்திகளில் நடுவான ஸ்ரீமஹாவிஷ்ணுவாகப் பிறப்பவர்.



148. அநக₄: - ஸம்ஸாரத்தில் பிறந்தாலும் குற்றமற்றவர்.

149. விஜய: - வெற்றியே உருவானவர்; மற்ற இரண்டு மூர்த்திகளும் தம் தம் செயல்களில் வெற்றிபெறச் செய்பவர்.

150. ஜேதா - மற்ற இருவரையும் தன் நினைவின்படி நிருத்துபவர்.

151. விச்வயோநி: - படைத்தல், காத்தல், அழித்தல் ஆகிய முத்தொழில்களாலும் உலகுக்குக் காரணமாய் இருப்பவர்.

152. புனர்வஸு: - நான்முகன் முதலான தேவர்களிடத்தில் அந்தர்யாமியாக வஸிப்பவர்.

ஸ்ரீ வாமந அவதாரம்

153. உபேந்த்₃ர: - இந்திரனுக்குத் தம்பி; அதிதி தேவியின் பன்னிரண்டாவது மகன்.

154. வாமந: - குள்ளமானவர்; தன்னை தரிசிப்பவர்களுக்குத் தன் திருமேனி அழகால் சுகமளிப்பவர்.

155. ப்ராம்சு: - உயரமானவர்; உடனே வளர்ந்து த்ரிவிக்ரமனாக உலகையே அளந்தவர்.

156. அமோக₄: - செயல்கள் வீணாகாதவர்; மஹாபலிக்கும் இந்திரனுக்கும் ஒரே சமயத்தில் உதவியவர்.

157. சுசி: - தூய்மையானவர்; தான் செய்யும் உதவிகளுக்கு பதில் உதவி எதிர்பாராதவர்.

158. ஊர்ஜித: - மஹாபலியின் மகனான நமுசி என்பானை அடக்கிய சக்தி படைத்தவன்.

159. அதீந்த்₃ர: - இந்திரனுக்கு இளையவனானாலும், தன் செயல்களால் அவனுக்கும் மேம்பட்டவர்.



160. ஸங்க்₃ரஹ: – மெய்யன்பர்களால் எளிதில் அறியப்படுபவர்.

161. ஸர்க₃: – த்ரிவிக்ரமாதவதாரம் செய்து தன் திருவடியை அடியார்களுக்காகப் பிறப்பித்தவர்.

162. த்₄ருதாத்மா – தன்னையே கொடுத்து அடியார்களைத் தாங்குபவர்.

163. நியம: – தன் அடியார்களின் பகைவர்களை அடக்குபவர்.

164. யம: – தன் அடியார்களின் இடையூறுகளை விலக்கி அருளுபவர்; அந்தர்யாமியாய் இருப்பவர்.

அவதரித்துக் காப்பவன்; இனியவன்

165. வேத்₃ய: – எளியவனாக பிறக்கிறபடியால் அனைவரின் புலன்களாலும் அறியக்கூடியவர்.

166. வைத்₃ய: – அடியார்களுக்குப் பிறவியைப் போக்கும் வித்யையை அறிந்தவர்.

167. ஸதா₃யோகீ₃ – அடியார்களைக் காக்க எப்போதும் விழித்திருப்பவர்.

168. வீரஹா – தீய வாதங்களால் மக்களை பகவானிடத்திலிருந்து பிரிக்கும் வலிமையுடையவர்களை ஒழிப்பவர்.

169. மாத₄வ: – பரமாத்ம ஜ்ஞானத்தைக் கொடுப்பவர்.

170. மது₄: – மெய்யடியார்களுக்கு தேன்போன்று இனிமையானவர்.

பொதுவான கல்யாண குணங்கள்

171. அதீந்த்₃ரிய: – அறிவை அளிக்கும் புலன்களுக்கு எட்டாதவர்.



172. மஹாமாய: – தன்னை ஶரணம் அடையாதவர்களுக்கு அறியவொண்ணாத மாயையை உடையவர்.

173. மஹோத்ஸாஹ: – மிக்க ஊக்கம் உடையவர்.

174. மஹாப₃ல: – வேறு உதவியை நாடாத வலிமை உள்ளவர்.

175. மஹாபு₃த்₃தி₄: – எப்போதும் எங்கும் அனைத்தையும் ஒரே சமயத்தில் அறிபவர்.

176. மஹாவீர்ய: – விகாரம் இல்லாதவர் ( மாறுபாடு அற்றவர் ).

177. மஹாஶக்தி: – தன் சரீரத்தின் ஒரு பகுதியான ப்ரக்ருதியை மாற்றி உலகத்தைப் படைக்கும் திறன் உள்ளவர். சிலந்தி தன் உடலிலிருந்தே நூலை வெளியேற்றி மறுபடியும் உள்ளே இழுப்பது போல.

178. மஹாத்₃யுதி: – சூரிய ஒளி சிறிது என்னும் அளவிற்குப் ப்ரகாசமானவர்.

179. அநிர்தே₃ஶ்யவபு: – நிகரற்ற விளக்கவொண்ணாத திருமேனியை உடையவர்.

180. ஸ்ரீமாந் – தன் திருமேனிக்குத் தகுந்த ஆபரணச் செல்வத்தை உடையவர்.

181. அமேயாத்மா – கடலைப்போல் ஆழமாய் அளவிட முடியாதவர்.

குணங்களுக்கு ஏற்ற அவதாரச் செயல்கள்

182. மஹாத்₃ரித்₄ருத் – பாற்கடலைக் கடையும்போது மந்திரமென்னும் பெரிய மலையைத் தாங்கினவர்.

183. மஹேஷ்வாஸ: – சார்ங்கத்தைத் தாங்கி, சிறந்த பாணங்களை எய்பவர்.



184. மஹீப$_4$ர்தா – பூமியை எளிதில் தாங்குபவர்.

185. ஸ்ரீநிவாஸ: – பாற்கடலிலிருந்து வெளிப்பட்ட திருமகளைத் தன் திருமார்பில் ஏந்துபவர்.

186. ஸதாம்க$_3$தி: – பக்தர்களான ஸாதுக்களுக்குக் கதியானவர்.

187. அநிருத்$_3$த$_4$: – அடியார்களைக் காக்கும்போது இடையூறுகளால் தடுக்க முடியாதவர்.

ஹம்ஸாவதாரம்

188. ஸுராநந்த$_3$: – தேவர்களின் ஆபத்தைப்போக்கி, மகிழ்ச்சியைக் கொடுப்பவர்.

189. கோ$_3$விந்த$_3$: – தேவர்கள் செய்யும் துதிகளைப் பெறுபவர்.

190. கோ$_3$விதா$_3$ம்பதி: – வேதவாக்குகளை அறிந்தவர்களுக்குத் தலைவர்.

191. மரீசி: – கண்ணிழந்தோர்க்கும் தன்னை வெளிப்படுத்தும் ஒளிக்கீற்றானவர்.

192. த$_3$மந: – தன் ஒளியினால் ஸம்ஸார வெப்பத்தை அடக்குபவர்.

193. ஹம்ஸ: – தூய அன்னமாக அவதரித்தவர்.

194. ஸுபர்ண: – ஸம்ஸாரக் கடலிலிருந்து கரைசேர்க்கும் அழகிய சிறகுகளை உடையவர்.

பத்மநாப அவதாரம் (உந்தித் தாமரையான்)

195. பு$_4$ஜகோ$_3$த்தம: – பாம்புகளுக்குள் சிறந்தவர்; ஆதிசேஷனுக்குத் தலைவர்.

196. ஹிரண்யநாப$_4$: – பொன்போன்ற உந்தியை உடையவர்.



197. ஸுதபா: - தன்னிடத்தில் க்ரஹிக்கப்பட்ட அனைத்தையும் அறிபவர்.
198. பத்மநாப: - உந்தியில் எட்டு இதழ்களோடு கூடிய தாமரையை உடையவர்.
199. ப்ரஜாபதி: - பிரமன் முதலிய அனைவர்க்கும் தலைவர்.

ஸ்ரீ நரஸிம்ஹ அவதாரம்

200. அம்ருத்யு: - ம்ருத்யு தெய்வத்துக்கே பகைவர்; மரணத்தை ஒத்த ஹிரண்யனுக்கு விரோதி.
201. ஸர்வத்ருக் - நண்பர்கள், பகைவர்கள், நடுநிலையாளர் ஆகிய அனைவரையும் சமமாகப் பார்ப்பவர்.
202. ஸிம்ஹ: - பெரிய நரஸிம்ஹ வடிவம் கொண்டவர்.
203. ஸந்தாதா - ஹிரண்யனை அழிக்கும் காலத்திலேயே பக்தப்ரஹ்லாதனை சேர்த்துக்கொண்டவர்.
204. ஸந்திமாந் - தன் அடியார்களோடு தன் சேர்க்கை நீங்காமல் இருப்பவர்.
205. ஸ்திர: - பக்தர்களிடம் வைத்த அன்பில், அவர்கள் குற்றத்தையும் பொறுத்து விலகாமல் இருப்பவர்.
206. அஜ: - தூணில் பிறந்தபடியால் இயற்கையான பிறப்பு இல்லாதவர்.
207. துர்மர்ஷண: - பகைவர்களால் தன் பார்வையைத் தாங்க முடியாமல் இருப்பவர்.
208. ஶாஸ்தா - தீயவர்களை தண்டிப்பவர்.
209. விஶ்ருதாத்மா: - வியந்து கேட்கத்தக்க நரஸிம்ஹாவதார திருவிளையாட்டுக்களை உடையவர்.
210. ஸுராரிஹா - தேவர்களின் பகைவனான ஹிரண்யனை அழித்தவர்.



ஸ்ரீ மத்ஸ்யாவதாரம்

211. கு₃ருர்கு₃ருதம: - பிரமனுக்கே உபதேசித்தபடியால் ஆசார்யனுக்கே ஆசார்யனானவர்.

212. தா₄ம: - சராசரங்களின் வித்துக்களைப் படகில் தாண்டி (தாங்கி) நடத்தியவர்; சித் அசித்துக்களுக்கு இருப்பிடம்.

213. ஸத்ய: - ப்ரளயத்தில் தன்னைச் சரணடைந்த மநு முதலானவர்களுக்கு உண்மையானவர்.

214. ஸத்யபராக்ரம: - மநுவினிடத்தில் தன் பராக்ரமத்தைக் காட்டினவர்.

215. நிமிஷ: - பகைவர்க்கு அருள்புரியாமல் கண்களை மூடியிருப்பவர்.

216. அநிமிஷ: - தன் அடியார்களைக் கடாக்ஷிக்க எப்போதும் கண்திறந்து இருப்பவர்.

217. ஸ்ரக்₃வீ: - வைரம் முத்து முதலான திவ்யமான ஐந்து மணிகளால் ஆன வைஜயந்தீ எனும் மாலையை அணிந்தவர்.

218. வாசஸ்பதி: - வேதத்தின் பொருளை மத்ஸ்ய புராணத்தில் கூறியபடியால், பேச்சுக்கே தலைவர்.

219. உதா₃ரதீ₄: - அனைவரும் உய்வடையவதற்கான அறிவை உடையவர்.

220. அக்₃ரணீ: - பக்தர்களை பரமபதத்திற்கு நடத்திச் செல்பவர்.

221. க்₃ராமணீ: - பக்தர்களை வைகுந்தத்திலிருக்கும் நித்யர்களிடமும் முக்தர்களிடமும் அழைத்துச் செல்பவர்.

222. ஸ்ரீமாந் - தாமரைக் கண்களையே செல்வமாக உடையவர். மீன் தன் குட்டிகளை கண்களால் பார்த்தே வளர்க்கும்.



223. ந்யாய: - தன் பக்தர்களுக்கு எது சரியோ அதைச் செய்பவர்.

224. நேதா - பக்தர்களின் காரியங்களை நடத்துபவர்; தான் மீனாகி, கடலுள் புகுந்து அடியார்களைக் கரையேற்றியவர்.

225. ஸமீரண: - பக்தர்களுக்கு இனிமையான திருவிளையாடல்களை உடையவர்.

புருஷஸூக்தத்தில் விளக்கப்பட்ட திருநாமங்கள்

226. ஸஹஸ்ரமூர்தா - ஆயிரம் (எண்ணற்ற) தலைகளை உடையவர்.

227. விஶ்வாத்மா: - தன்னுடைய ஜ்ஞான சக்திகளால் ப்ரபஞ்சம் முழுவதும் பரவியிருப்பவர்.

228. ஸஹஸ்ராக்ஷ: - எண்ணற்ற கண்களை உடையவர்.

229. ஸஹஸ்ரபாத் - எண்ணற்ற திருவடிகளை உடையவர்.

230. ஆவர்த்தந: - ஸம்ஸாரச் சக்கரத்தைச் சுழற்றுபவர்; கால சக்ரம், உலக சக்ரம், யுக சக்ரம் ஆகியவற்றைச் சுழற்றுபவர்.

231. நிவ்ருத்தாத்மா - ப்ரக்ருதியைக் காட்டிலும் மும்மடங்கு பெருத்த நித்யமண்டலத்தை உடையவரானபடியால் மிகச்சிறந்த ஸ்வரூபம் உடையவர்.

232. ஸம்வ்ருத: - ப்ரக்ருதியின் தமோகுணத்தால் அறிவிழந்தவர்களுக்கு மறைந்திருப்பவர்.

233. ஸம்ப்ரமர்த்தந: - தன்னை உபாஸிப்பவர்களுக்குத் தமோகுணமாகிய இருட்டை ஒழிப்பவர்.



234. அஹஸ்ஸம்வர்த்தக: - நாள், பக்ஷம், மாதம் முதலான பிரிவுகளுடைய காலசக்கரத்தைச் சுழற்றுபவர்.

235. வஹ்நி: - எங்குமுள்ள பரம ஆகாச உருவத்தில் ப்ரபஞ்சத்தையே தாங்குபவர்.

236. அநில: - ப்ராணவாயுவாக இருந்து யாவரும் வாழும்படி செய்பவர்.

237. த₄ரணீத₄ர: - தன் ஸங்கல்பத்தாலேயே பூமியைத் தாங்குபவர்.

238. ஸுப்ரஸாத: - தன்னை வேண்டியவர்களுக்கு அனைத்துப் ப்ரார்த்தனைகளையும் நிறைவேற்றுபவர்.

239. ப்ரஸந்நாத்மா - நிறைவேறாத ஆசையே இல்லாதபடியால், நிறைந்த மனம் உள்ளவர்.

240. விஶ்வஸ்ருக் - ஜீவர்களின் குற்றம் பாராமல், கருணையே காரணமாக உலகைப் படைப்பவர்.

241. விஶ்வபு₄க்₃விபு₄: - ஒரே காப்பாளனாக உலகில் எங்கும் பரவியிருப்பவர்.

242. ஸத்கர்த்தா - மெய்யன்பர்களைப் பூசிப்பவர்.

243. ஸத்க்ருத: - சபரி முதலான சாதுக்களால் பூசிக்கப்படுபவர்.

244. ஸாது₄: - அடியார்கள் விரும்பியபடி தூது போவது, தேரோட்டுவது ஆகியவற்றைச் செய்பவர்.

245. ஜஹ்நு: - பொறாமையும் பகைமையும் உள்ளோருக்குத் தன்னை மறைப்பவர்.

246. நாராயண: - அழியாத நித்யமான சித் அசித் கூட்டத்திற்கு இருப்பிடமானவர்; அந்தர்யாமியானவர்.

247. நர: - தன் உடைமையாகிய சித் அசித்துக்களை அழியாமல் இருக்கப்பெற்றவர்.



யானே நீ; என் உடைமையும் நீயே

248. அஸங்க்₂யேய: - எண்ணிரந்தவர்; உடமைகள் எண்ணிரந்தபடியால்.

249. அப்ரமேயாத்மா - எண்ணிரந்த பொருட்களின் உள்ளும் புறமும் வ்யாபிக்கிறபடியால் அளவிடமுடியாதவர்.

250. விஶிஷ்ட: - எதிலும் பற்றில்லாதபடியால் அனைத்தையும்விட உயர்ந்தவர்.

251. ஶிஷ்டக்ருத் - தன் அடியார்களை நற்பண்புடையவர்களாக ஆக்குபவர்.

252. ஶுசி: - தானே தூய்மையாக இருப்பவர்; தன்னை அண்டியவர்களைத் தூய்மையாக்குபவர்.

253. ஸித்₃தா₄ர்த₂: - வேண்டியது எல்லாம் அமையப்பெற்றவர்.

254. ஸித்₃த₄ஸங்கல்ப: - நினைத்ததெல்லாம் நடத்திமுடிக்கும் பெருமை உள்ளவர்.

255. ஸித்₃தி₄த₃: - எட்டு சித்திகளையும் யோகிகளுக்கு அருளுபவர்.

256. ஸித்₃தி₄ஸாத₄ந: - இவரை அடைவிக்கும் வழியான பக்தியே இனியதாக உடையவர்.

257. வ்ருஷாஹீ - அவனை அடையும் நாளே நன்னாளான தர்மமாக இருப்பவர்.

258. வ்ருஷப₄: - ஸம்ஸாரத்தீயால் சுடப்பட்டவர்களுக்கு அருளென்னும் அமுதைப் பொழிபவர்.

259. விஷ்ணு: - அருள் மழையாலேயே எங்கும் இருப்பவர்.

260. வ்ருஷபர்வா - தன்னை அடைவதற்கு, தர்மங்களைப் படிக்கட்டாக உடையவர்.



261. வ்ருஷோத₃ர: - தன் வயிறே தர்மமானவர்; அடியார்கள் அளிக்கும் நைவேத்யத்தால் வயிறு நிறைபவர்.

262. வர்த₄ந: - தாய்போல் தன் வயிற்றில் வைத்து அடியார்களை வளர்ப்பவர்.

263. வர்த₄மாந: - அடியார்கள் வளரும்போது தானும் மகிழ்ந்து வளர்பவர்.

264. விவிக்த: - மேற்கண்ட செயல்களால் தன்னிகரற்றவர்.

265. ஶ்ருதிஸாக₃ர: - நதிகளுக்குக் கடல்போல, வேதங்களுக்கு இருப்பிடமானவர்.

266. ஸுபு₄ஜ: - அடியார்களின் சுமையைத் தாங்கும் மங்களமான தோள்கள் உடையவர்.

267. து₃ர்த₄ர: - கடல்போல் தடுக்கமுடியாத வேகமுடையவர்.

268. வாக்₃மீ - வேதவடிவமான சிறந்த வாக்கை உடையவர்; வேதங்களால் துதிக்கப்படுபவர்; இனிமையாகப் பேசுபவர்.

269. மஹேந்த்₃ர: - நிகரற்ற அளவிடமுடியாத (அனைவரையும் ஆளும்) செல்வம் உடையவர்.

270. வஸுத₃: - குபேரனைப்போல் பொருட்செல்வத்தை விரும்புவோர்க்கு அதை அருளுபவர்.

271. வஸு: - ஆழ்வார்கள் போன்றோர்களுக்குத் தானே செல்வமாக இருப்பவர்.

பெருமைகளை வெளிப்படுத்தும் விஶ்வரூபம்

272. நைகரூப: - பல உருவங்களை உடையவர்.



273. ப்$_3$ருஹத்$_3$ரூப: - ஒவ்வொரு உருவமும் ப்ரஞ்சத்தையே வ்யாபிக்கும் பெரியோனாய் இருப்பவர்.

274. ஶிபிவிஷ்ட: - ஒளிக்கீற்றுக்குள் நுழைந்து அனைத்தையும் வ்யாபிப்பவர்; சூரிய ஒளியைப்போல் உடலில் நுழைபவர்.

275. ப்ரகாஶந: - காணக் கருதும் பக்தர்களுக்குத் தன்னைக் காட்டுபவர்.

276. ஓஜஸ்தேஜோத்$_3$யுதித$_4$ர: - வலிமை, சக்தி, ஒளி ஆகியவற்றை உடையவர்.

277. ப்ரகாஶாத்மா - அறிவிழந்தவர்களுக்கும் தனித்தன்மையோடு புலப்படும் தன்மை உடையவர்.

278. ப்ரதாபந: - பகைவர்களுக்கு வெப்பத்தை உண்டாக்குபவர்.

279. ருத்$_3$த$_4$: - பௌர்ணமிக் கடல்போல் எப்போதும் நிறைந்திருப்பவர்.

280. ஸ்பஷ்டாக்ஷர: - தன் பெருமையை வெளிப்படுத்தும் வேதச்சொற்களை உடையவர்.

281. மந்த்$_3$ர: - தன்னை நினைப்பவரைக் காப்பவர்.

282. சந்த்$_3$ராம்ஶு: - த்யானிப்பவரின் களைப்பை ஒழிக்கும் நிலவின் குளிர்ந்த ஒளியை உடையவர்.

283. பா$_4$ஸ்கரத்$_3$யுதி: - பகைவர்களை ஓட்டும் சூர்யனைப் போன்ற ஒளி படைத்தவர்.

284. அம்ருதாம்ஶூத்$_3$ப$_4$வ: - குளிர்ந்த நிலவின் ஒளிக்குப் பிறப்பிடமானவர்.

285. பா$_4$நு: - ஸூரியனுக்கே ஒளியை அருளும் ப்ரகாசமுடையவர்.

286. ஶஶபி$_3$ந்து$_3$: - தீயோர்களை எளிதில் நீக்குபவர்.



287. ஸுரேஶ்வர: – நல்வழிச்செல்பவர்களே தேவர்கள்; அவர்களுக்குத் தலைவர்.

288. ஒளஷத$_4$ம் – ஸம்ஸாரமென்னும் கொடிய நோயைத் தீர்க்கும் மருந்து.

289. ஜக$_3$தஸ்ஸேது: – உலகில் நல்லவை, தீயவைகளைப் பிரிக்கும் அணைபோன்றவர்.

290. ஸத்யத$_4$ர்மபராக்ரம: – உலகை வாழ்விக்கும் தர்மத்தை (திருவிளையாடல், பண்புகள்) உடையவர்.

291. பூ$_4$தப$_4$வ்யப$_4$வந்நாத$_2$: – மேற்கண்ட பெருமையை முக்காலத்திலும் உடையவர்.

292. பவந: – காற்றுபோல் எங்கும் செல்பவர்.

293. பாவந: – (தூய்மையளிக்கும் கங்கைக்கும்) தூய்மையளிப்பவர்.

294. அநல: – தன் அடியார்களுக்கு எத்தனை கொடுத்தாலும், போதும் என்ற மனமில்லாதவர்.

295. காமஹா – தன்னையே வேண்டுபவர்களுக்கு உலக இன்ப ஆசையை ஒழிப்பவர்.

296. காமக்ருத் – அவரவர் விருப்பப்பட்ட பலனைக் கொடுப்பவர்.

297. காந்த: – தன் மென்மையான திருமேனி அழகால் காண்பவரை ஈர்ப்பவர்.

298. காம: – வண்மை, எளிமை ஆகிய குணங்களால் அனைவராலும் விரும்பப்படுபவர்.

299. காமப்ரத$_3$: – நிலையற்ற செல்வத்தையும் நிலையான தன்னையும், வேண்டியவற்றை அளிப்பவர்.

300. ப்ரபு$_4$: – மேற்சொன்ன சிறப்புகளால் காண்பவர்களின் கண்ணையும் மனத்தையும் பறிப்பவர்.



ஆலமாமரத்தின் இலை மேல் ஒரு பாலகன்

301. யுகாதி₃க்ருத் - ப்ரளயத்தின்போது உலகத்தைத் தன் வயிற்றில் வைத்துக் காத்து, பின், யுகங்களுக்குத் தொடக்கமான ஸ்ருஷ்டியைச் செய்பவர்.

302. யுக₃ாவர்த்த: - நான்கு யுகங்களையும் அதனதன் தர்மங்களோடு திரும்பத் திரும்ப வரச்செய்பவர்.

303. நைகமாய: - சிறு குழந்தையாக உலகை விழுங்குவது, ஆலிலையில் துயில்வது முதலான பல வியப்புகளை உடையவர்.

304. மஹாஶந: - உலகையே விழுங்கும் பெரும் தீனி உள்ளவர்.

305. அத்₃ருஶ்ய: - மார்க்கண்டேயர் முதலான ரிஷிகளின் நினைவுக்கும் எட்டாதவர்.

306. வ்யக்தரூப: - ஆனால், மார்க்கண்டேயர் வேண்டியபோது தன் திருமேனியைப் புலப்படுத்தியவர்.

307. ஸஹஸ்ரஜித் - ஆயிரம் யுகங்களுள்ள ப்ரளயத்தை யோக உறக்கத்தாலே ஜயிப்பவர்.

308. அநந்தஜித் - தன் பெருமையின் எல்லையை யாராலும் காண முடியாதவர்.

309. இஷ்ட: 310. அவிஶிஷ்ட:- தன் வயிற்றிலிருக்கும் அனைவராலும் தாய்போல் விரும்பப்படுபவர்.

311. ஶிஷ்டேஷ்ட: - சான்றோர்களால் அடையப்படும் பொருளாக விரும்பப்படுபவர்.

312. ஶிக₂ண்டீ₃ - தன் மஹிமையையே தனக்கு ஆபரணமாக உள்ளவர்.



313. நஹுஷ: – தமது மாயையினால் ஜீவர்களை கட்டுப்படுத்துபவர்.

314. வ்ருஷ: – அடியார்களை அமுதம்போன்ற திருமேனி ஒளியாலும் சிறப்பாலும் மகிழ்விப்பவர்.

பரசுராமரா! அல்லது கோபத்தின் உருவமா!

315. க்ரோதஹா – க்ஷத்ரியர்களை 21 தலைமுறைகள் அழித்தப்பின் கோபத்தை ஒழித்தவர்.

316. க்ரோதக்ருத் – முதலில் க்ஷத்ரியர்களிடம் கோபம் கொண்டவர்.

317. கர்த்தா – தன் கோபத்தைத் தூண்டிய கார்த்தவீர்யனை ஜயித்தவர்.

318. விஸ்வபாஹு: – தீயோர்களை அழிப்பதால், உலகுக்கு நன்மை செய்யும் கைகளை உடையவர்.

319. மஹீதர: – சுமையாக இருக்கும் தீயவர்களை ஒழித்து, பூமியைத் தாங்குபவர்.

320. அச்யுத: – பிறக்கும்போதும் ஏனைய தேவர்களைப்போல் தன் மேன்மை நிலையிலிருந்து இறங்காதவர்.

321. ப்ரதித: – பெரும் புகழாளர்.

322. ப்ராண: – அனைத்து ஜீவர்களுக்கும் மூச்சுக்காற்றானவர்.

அனைத்தையும் தாங்கும் ஆமை!

323. ப்ராணத: – பாற்கடல் கடைந்தபோது தேவர்களுக்கு வலிமை கொடுத்தவர்.

324. வாஸவாநுஜ: – விரும்பிய அமுதைப் பெற இந்திரனுக்கு தம்பியாகப் பிறந்தவர்.

325. அபாம்நிதி: – கடல் கடையப்பட்டபோது அதற்கு ஆதாரமாகத் தாங்கியவர்.



326. அதி₄ஷ்டா₂நம் - அப்போதே மத்தான மந்தரமலையை மூழ்காமல் தாங்கியவர்.

327. அப்ரமத்த: - அடியார்களைக் காப்பதில் விழிப்புடன் இருப்பவர்.

328. ப்ரதிஷ்டி₂த: - வேறு ஆதாரம் வேண்டாதபடி தன்னிடத்திலேயே நிலைபெற்று இருப்பவர்.

329. ஸ்கந்த₃: - அஸுரர்களையும் தீயவர்களையும் வற்றச் செய்பவர்.

330. ஸ்கந்த₃த₄ர: - தேவஸேனாதிபதியான ஸுப்ரஹ்மண்யனையும் தாங்குபவர்.

331. து₄ர்ய: - உலகனைத்தையும் தாங்குபவர்.

332. வரத₃: - தேவர்களுக்கு வரங்களை அருளுபவர்.

333. வாயுவாஹந: - ப்ராணனான காற்றையும் நடத்துபவர்.

வாஸுதேவனின் குணங்கள்

334. வாஸுதே₃வ: - அனைத்துள்ளும் வஸிப்பவர். ஸூர்யன் தன் ஒளியால் உலகத்தையும், தாய்ப்பறவை தன் சிறகால் குஞ்சையும் மூடுவதுபோல் உலகையே அணைத்தவர்.

335. ப்₃ருஹத்₃பா₄நு: - பல்லாயிரம் ஸூர்யர்களின் ஒளியை உடையவர்.

336. ஆ₃தி₃தே₃வ: - உலகிற்கு முதற்காரணமாய் இருந்து படைப்பதை விளையாட்டாகக் கொண்டவர்.

337. புரந்த₃ர: - அஸுரரர்களின் பட்டணங்களை அழிப்பவர்.

338. அஶோக: - பசி, மயக்கம் முதலிய துன்பங்களைப் போக்குபவர்.



339. தாரண: – திருடர், பகைவர் முதலான பயங்களைத் தாண்டுவிப்பவர்.

340. தார: – பிறப்பு, இறப்பு, கர்ப்பவாஸம் முதலான அச்சங்களைத் தாண்டுவிப்பவர்.

341. ஶூர: – மேற்கண்டவைகளில் எப்போதும் வெற்றிபெறும் திறலுடையவர்.

342. ஶௌரி: – சூரன் என்னும் வஸுதேவரின் மகன்.

343. ஜநேஶ்வர: – பிறப்புடைய மக்களுக்கெல்லாம் தலைவர்.

344. அநுகூல: – தன் மேன்மை பாறாமல் அடியார்களால் எளிதில் அடையப்படுபவர்.

345. ஶதாவர்த: – அடங்காமல் வளர்ந்துவரும் செல்வச் சுழல்களை உடையவர்.

வாஸுதேவனின் திருமேனி

346. பத்$_3$மீ – கையில் விளையாட்டுத் தாமரையைப் பிடித்திருப்பவர்.

347. பத்$_3$ம நிபே$_4$க்ஷண: – தாமரைபோல் மலர்ந்த கண்களால் அருளுபவர்.

348. பத்$_3$மநாப$_4$: – தன் உந்தியில் மலர்ந்த தாமரையை உடையவர்.

349. அரவிந்தா$_3$க்ஷ: – கமலம்போன்ற கண்கள் உடையவர்.

350. பத்$_3$மகர்ப$_4$: – அடியார்களின் தாமரைபோன்ற இதய ஆஸனத்தில் வீற்றிருப்பவர்.

351. ஶரீரப்$_4$ருத் – தமக்கு உடல்போன்ற பக்தர்களைப் பேணுபவர்.



வாஸுதேவனின் செல்வம்

352. மஹர்த்₃தி₄: - பக்தர்களைப் பேணுவதற்காகப் பெருஞ்செல்வம் உடையவர்.

353. ருத்₃த₄: - பக்தர்கள் வளர்வதைக் கண்டு தான் செழிப்பவர். விபீஷணனுக்குப் பட்டாபிஷேகம் செய்து இராமன் மகிழ்ந்தான்.

354. வ்ருத்₃தா₄த்மா - மேற்கண்ட பெருமைகளை உள்ளங்கையில் அடக்கும் அளவிற்கு ஸ்வரூப மேன்மை பெற்றவர்.

355. மஹாக்ஷ: - வேதவடிவரான கருடனை வாஹனமாகக் கொண்டவர்.

356. க₃ருட₃த்₄வஜ: - பரம்பொருளுக்கு அடையாளமாய், கருடனையே கொடியாகக் கொண்டவர்.

357. அதுல: - நிகரற்றவர்; ஒப்பிலியப்பன்.

358. ஶரப₄: - வேத வரம்புகளை மீறினவர்களை அழிப்பவர்.

359. பீ₄ம: - ஆணையை மீறுபவர்களுக்கு பயத்தைக் கொடுப்பவர். தேவர்களும் பெருமானின் ஆணைக்கு உட்பட்டே கடமையை ஆற்றுபவர்.

360. ஸமயஜ்ஞ: - பக்தர்களை காப்பதற்கு வேண்டிய தக்க தருணத்தை உடையவர்.

361. ஹவிர்ஹரி: - யாகங்களில் கொடுக்கப்படும் ஹவிர்பாகத்தைப் பெற்றுக்கொள்பவர்; பக்தர்களுக்கு தன்னையே கொடுப்பவர்; அடியார்களின் பாபத்தைப் போக்குபவர்.



வாஸுதேவன் – திருமகள் கேள்வன்

362. ஸர்வலக்ஷண லக்ஷண்ய: - திருமகள் நாதனானபடியால் மஹாபுருஷனின் லக்ஷணம் பொருந்தியவர்.

363. லக்ஷ்மீ வாந் – விட்டுப்பிரியாத திருமகளை உடையவர்.

364. ஸமிதிஞ்ஜய: – அடியார்களின் குழப்பத்தை வென்று தெளிவு கொடுப்பவர்.

365. விக்ஷர: – தன்னை அடைந்தவர்களிடம் குறையாத அன்புடையவர்.

366. ரோஹித: - தான் கறுத்தவர், ஆனால் தாமரையின் உட்புறம் போன்ற சிவந்த கண் கை கால் உடையவர்; மேகத்தைப்போல் பகவான்; அதில் மின்னலைப்போல் மஹாலக்ஷ்மீ.

367. மார்க$_3$: – பக்தர்களால் எப்போதும் தேடப்படுபவர்.

368. ஹேது: – பக்தர்களின் வேண்டுகோள்கள் பயன்பெறக் காரணமாய் இருப்பவர்.

369. தா$_3$மோத$_3$ர: - தாமம் என்று பெயர்பெற்ற உலகங்களை வயிற்றில் கொண்டவர்; யஶோதையின் தாம்பினாலே கட்டுண்டவர்.

370. ஸஹ: – திருமகள்கேள்வனாக இருந்தாலும், அவதாரத்தில் கட்டுண்டு எளிமையைக் காட்டியவர்.

371. மஹீத$_4$ர: – பூமியின் சுமையைத் தாங்குபவர்.

372. மஹாபா$_4$க$_3$: - கோபிகைகள் மற்றும் ருக்மிணீ ஸத்யபாமா ஆகியோரால் விரும்பப்படும் பெருமையுடையவர்.



373. வேக₃வாந் - மனிதக்குழந்தையாக விளையாடும்போதும் பரம்பொருளான வேகம் குறையாதவர்.

374. அமிதாஶந: - ஆயர்கள் இந்திரனுக்குப் படைத்த அட்டுக்குவிசோற்றை விழுங்கியவர்.

375. உத்ப₄வ: - தாம் கட்டுண்டதை நினைப்பவரின் ஸம்ஸாரக்கட்டை விலக்குபவர்.

376. க்ஷோப₄ண: - ஸம்ஸாரத்தில் கட்டும் ப்ரக்ருதியையும் கட்டுப்படும் ஜீவர்களையும் ஸ்ருஷ்டியின்போது கலக்கி உண்டாக்குபவர்.

377. தே₃வ: - ஜீவர்களை விளையாடச் செய்து, தானும் விளையாடுபவர்.

378. ஸ்ரீக₃ர்ப₄: - நீக்கமில்லாத திருமகளோடு இன்புறுமவர்.

379. பரமேஶ்வர: - நீக்கமில்லாத் திருமகள் தொடர்போடு அனைத்தையும் ஆட்சி செய்பவர்.

380. கரணம் - காணுதல், கேட்டல் முதலான செயல்களுக்குக் கருவியாக இருப்பவர்; தன்னை அடைவதற்குத் தானே கருவியாக இருப்பவர்.

381. காரணம் - புலன்கள் செயல்படுவதற்குக் காரணமானவர்.

கருவியும், காரணமும், இயக்குமவனும், செய்பவனும் அவனே

382. கர்த்தா - ஜீவர்களின் இன்பதுன்பங்களைத் தன்னதாகக் கொண்டு செயல்படுபவர்.

383. விகர்த்தா - அடியார்களின் இன்பதுன்பங்களில் பங்கு கொண்டாலும் தான் இன்பதுன்பங்களால் மாறுபடாதவர், பிறருக்காக துக்கப்படுதல் குற்றம் அல்லவே?



384. க$_{3}$ஹந: – ஜீவர்களின் இன்பதுன்பங்களை தன்னதாக நினைப்பதில் ஆழங்காண முடியாதவர்.

385. கு$_{3}$ஹ: – மேற்சொன்ன வகைகளில் அடியார்களைக் காப்பவர்.

த்ருவனும் நக்ஷத்ரமண்டலமும்

386. வ்யவஸாய: – அனைத்து க்ரஹங்களும் நக்ஷத்ரங்களும் உறுதியாக தன்னிடம் பிணைக்கப் பட்டிருக்குமவர்.

387. வ்யவஸ்தா$_{2}$ந: – காலத்தின் பிரிவுகளான கலை, நாழிகை, முஹூர்த்தம் ஆகியவற்றுக்கு அடிப்படையானவர்.

388. ஸம்ஸ்தா$_{2}$ந: – அனைத்தும் இறுதியில் தம்மிடம் முடியும்படி இருப்பவர்.

389. ஸ்தா$_{2}$நத$_{3}$: – த்ருவனுக்கு அழியாத உயர்ந்த ஸ்தானத்தைக் கொடுத்தவர்.

390. த்$_{4}$ருவ: – அழியாதவர்; த்ருவனுக்கு பதவிகொடுத்து அழியாப்புகழ் கொடுத்தவர்.

391. பரர்த்$_{3}$தி$_{4}$: – கல்யாண குணங்களால் நிரம்பியவர்; இராமனின் நிறைவுக்கு நிகரில்லை; ஆனால் போலி கூறலாம்.

மாண்டவரையும் உயிர்ப்பிக்கும் இராமன்

392. பரமஸ்பஷ்ட: – தமது மேன்மையை வெளிப்படையாக்கினவர்.

393. துஷ்ட: – தன் மேன்மையைவிட தயரதனுக்கு மகனாகப்பிறந்த எளிமையில் திருப்தி கொண்டவர்.

394. புஷ்ட: – நற்பண்புகளின் நிறைவான இருப்பிடமானவர்.



395. ஶுபே₄க்ஷண: - மங்களத்தை நல்கும் பார்வை உடையவர்; எவன் இராமனைப் பார்க்கவில்லையோ, எவனை இராமன் பார்க்கவில்லையோ அவர் இருவரும் இகழத்தக்கோர்.

396. ராம: – தன் குணங்களாலும், திருமேனி அழகாலும் அனைவரையும் மகிழ்விப்பவர்.

397. விராம: - தான் செயல்படும்போது வரம் கொடுத்த தேவர்கள், வரம் பெற்ற இராவணன் முதலானோர், கொடுக்கப்பட்ட சாகாவரம், ஆகிய அனைத்தும் ஓய்ந்துபோகும்படி செய்பவர்.

398. விரத: – அரசில் பற்றில்லாதவன்.

மார்க₃: - பரத்வாஜர் முதலான முநிவர்களால் தேடப்படுபவன் (விரஜோமார்க்க: என்று ஒரு திருநாமமானபோது, குற்றமில்லாத வழியைக் காட்டுபவர் என்று பொருள்).

399. நேய: – அன்பு கொண்ட ரிஷிகள் கட்டளையிடும்படி அடங்கி இருப்பவர்.

400. நய: – ரிஷிகளை கர்ப்பத்தைப்போல் பாதுகாப்பவர்.

401. அநய: – பகைவர்களால் நடத்தப்பட முடியாதவர்.

402. வீர: – ராக்ஷஸர்களை அச்சத்தில் நடுங்கவைப்பவர்.

403. ஶக்திமதாம்ஶ்ரேஷ்ட₂: - வலிமைமிக்க தேவர்களைவிடச் சிறந்தவர்.

404. த₄ர்ம: - தர்மத்தின் உருவானவர்; இவ்வுலக, அவ்வுலக பேற்றைக்கொடுத்து, ஜீவர்களை தாமே தாங்குபவர்.



405. த$_4$ர்மவித்$_3$உத்தம: - தர்மம் அறிந்தவர்களான ரிஷிகளைவிடச் சிறந்தவர்.

406. வைகுண்ட$_2$: - பக்தர்களை விலகாமல் தம்மிடம் சேர்த்துக் கொண்டவர்.

407. புருஷ: - பாவச்சுமையை எரிப்பவர்; சராசரங்களுக்கு முன்செல்பவர்.

408. ப்ராண: - அனைவரையும் உய்விக்கும் மூச்சுக்காற்றானவர்.

409. ப்ராணத$_3$: - உயிரளிப்பவர்; இராமன் வனம்சென்றபோது மரங்களும் வாடிப்போயின.

410. ப்ரணவ: - அனைவரும் தம்மை வணங்கும்படி இருப்பவர்.

411. ப்ருது$_2$: - பெரும் புகழாளர்.

412. ஹிரண்யக$_3$ர்ப$_4$: - அவதாரங்களுக்குப் பிறபட்டவர்களின் உள்ளங்களிலும் பொன்போல வஸிப்பவர்.

413. ஶத்ருக்$_4$ன: - தன்னை த்யானிப்பவர்களின் தறிகெட்டோடும் புலன்களை பகுத்தறிவை அருளி அடக்குபவர்.

414. வ்யாப்த: - பக்தர்களிடம் ஏற்றத்தாழ்வு பார்க்காமல் விரிவான அன்பு காட்டுபவர்.

415. வாயு: - (சபரீ, குஹன், பரத்வாஜன் போன்ற) அன்பர்களின் இருப்பிடத்திற்கு தேடிச் செல்லும் காற்றுப் போன்றவர்.

416. அதோ$_4$க்ஷஜ: - யாவரும் அனுபவித்துப் பயன்படுத்தினாலும் கடல்போன்ற பெருமை குறையாதவர்.

417. ருது: - பக்தர்களை வளர்க்கும் கிளர்ந்துவரும் குணவரிசைகளை உடையவர்.



418. ஸுதர்ஸந: - இராமனின் பெருமை அறியாதவரும் அவன் திருமேனியைக் கண்டவுடன் ஈடுபடும் அழகுடையவர்.

419. கால: - தன் நற்பண்புகளால் அனைவரையும் தம்மிடம் இழுத்துக் கொள்பவர்.

420. பரமேஷ்டீ - இராமாவதாரம் முடிந்தபின் திரும்பவும் வைகுந்தத்தில் இருப்பவர்.

421. பரிக்ரஹ: - இராமன் இவ்வுலகைவிட்டு வைகுந்தம் செல்லும்போது, அயோத்திமக்களையும் மரங்களையும் எங்கும் ஏற்றுக்கொண்டவர்.

கல்கி அவதாரம்

422. உக்ர: - தர்மத்தின் பகைவர்களிடத்தில் கொடியவராய் இருப்பவர்.

423. ஸம்வத்ஸர: - அழிப்பதற்குரிய கருவிகளுடன் பாதாள உலகில் ஆதிசேஷன்மேல் காத்திருப்பவர்.

424. தக்ஷ: - கலியுக இறுதியில் திரிந்துகொண்டிருக்கும் தீயவர்களை விரைவில் அழித்தவர்.

425. விஸ்ராம: - தீய வினைகளின் பயனாக களைத்தவர்களுக்கு இளைப்பாருமிடம்.

426. விஸ்வதக்ஷிண: - நல்லார் தீயார் என்ற வேற்றுமை இன்றி அன்பைக் காட்டுபவர்.

427. விஸ்தார: - அதர்மமான கலியுகத்தை அழித்து, க்ருதயுக தர்மத்தை வெளிப்படுத்துமவர்.

428. ஸ்தாவரஸ்தாணு: - கல்கியாய் தர்மத்தை நிலைநிறுத்தி பின், சாந்தமாக இருப்பவர்.

429. ப்ரமாணம் - தர்மத்தை க்ருதயுகத்திலுள்ளோர் கடைப்பிடிக்க அறிவின் ஊற்றாக இருப்பவர்.



430. பீ₃ஜமவ்யயம் - க்ருதயுகதர்மம் வளர்வதற்கு அழிவில்லாத விதைபோன்றவர்.

431. அர்த₂: - அவனிடத்திலேயே லயித்த பக்தர்களால் பயனாக வேண்டப்படுபவர்.

432. அனர்த₂: - தாழ்ந்த பயன்களை விரும்புபவர்களால் வேண்டப்படாதவர்.

433. மஹாகோஶ: - பக்தர்களுக்குக் கொடுக்க குறைவற்ற நவநிதிகளை (சங்க, பத்ம, மஹாபத்ம, மகர, கச்சப, முகுந்த, குந்த, நீல, கர்வ) உடையவர்.

434. மஹாபோ₄க₃: - செல்வத்தால் சாதிக்கப்படும் சிறந்த இன்பத்தைத் தருபவர்.

435. மஹாத₄ந: - வாரி இறைத்தாலும் அழியாத செல்வம் உடையவர்.

நக்ஷத்ரங்களும் சிம்ஶுமார சக்ரமும்

436. அநிர்விண்ண: - மக்கள் தாழ்ந்த செல்வத்தையே தன்னிடம் வேண்டினாலும், அவர்களை திருத்துவதில் சோர்வில்லாதவர்.

437. ஸ்த₂விஷ்ட₂: - நக்ஷத்ரமண்டலமாகிய ஶிம்ஶுமார சக்ரமாக விரிந்திருப்பவர்.

438. பூ₄: - த்ருவ பதவியிலிருந்து பூமியையும் ஆகாயத்தையும் தாங்குபவர்.

439. த₄ர்மயூப: - தர்மத்தை தலைபோல் முக்கியமாகப் தன்னிடம் சேர்த்துக்கொண்டவர்.

440. மஹாமக₂: - தர்மத்தை வளர்க்கும் யாகங்களை தனக்கு உடலுறுப்பாகக் கொண்டவர்.

441. நக்ஷத்ரநேமி: - நக்ஷத்ரங்களை சுற்றிவரச் செய்பவர்.



442. நக்ஷத்ரீ - நக்ஷத்ரங்களுக்கு உள்ளே இருக்கும் ஆதாரமானவர்.

443. க்ஷம: - ப்ரபஞ்சச்சுமையை எளிதில் தாங்குபவர்.

444. க்ஷாம: - பிரமனின் இரவுபொழுதுப் ப்ரளயத்தின்போது ஏனைய நக்ஷத்ரங்கள் அழிந்து, த்ருவனோடு நான்கு நக்ஷத்ரங்களே இருக்கிறபடியால், குறைவுபட்டிருப்பவர்.

445. ஸமீஹந: - ஸ்ருஷ்டி தொடங்கியவுடன் மக்களை தம் தம் தர்மத்தில் ஈடுபடுத்துபவர்.

யஜ்ஞஸ்வரூபி

446. யஜ்ஞ: - யாக யஜ்ஞ வடிவமானவர்; அதற்குப் பயனை அளிப்பவர்.

447. இஜ்ய: - உலகச்செல்வத்தை வேண்டுபவர்களால் இந்திரன் முதலான தேவர்கள் உருவில் பூசிக்கப்படுபவர்.

448. மஹேஜ்ய: - அவனையே விரும்புவர்களால் நேரே பூசிக்கப்படுபவர்.

449. க்ரது: - பஞ்சமஹாயஜ்ஞம் முதலியவற்றால் பூசிக்கப்படுபவர்.

450. ஸத்ரம் - பலரால் நீண்டகாலம் செய்யப்படும் ஸத்ரயாகத்தில் பூசிக்கப்படுபவர்.

நரநாராயண அவதாரம்

451. ஸதாம்கதி: - புலன்களை அடக்கிய பற்றற்றவர்களுக்கு சேருமிடமாய் இருப்பவர்.

452. ஸர்வதர்சீ - பற்றுடன் செய்யும் தர்மம், பற்றற்று நீங்கும் தர்மம் (ப்ரவ்ருத்தி நிவ்ருத்தி தர்மங்கள்) ஆகிய இரண்டையும் நேரே காண்பவர்.



453. நிவ்ருத்தாத்மா - வைராக்யத்தை உபதேசிப்பதற்காக நாராயண அவதாரம் எடுத்து, பற்றற்று இருந்தவர்.

454. ஸர்வஜ்ஞ: - குறைவற்ற தன் மேன்மையை முற்றும் அறிந்தவர்.

455. ஜ்ஞாநமுத்தமம்- பாஞ்சராத்ர ஆகமத்தின் மூலம் வைஷ்ணவ தர்மத்தை அனைவரும் அறியக் காரணமானவர்.

456. ஸுவ்ரத: - கர்மம் தீண்டப்பெறாதவராய் இருந்தும், பிறருக்கு முன்மாதிரியாவதற்காக தர்மங்களைச் செய்ய உறுதிக்கொண்டவர்.

அலைகடல் கடைந்த ஆரமுதம்

457. ஸுமுக$_2$: - (அமுதம் கொடுக்கும்போது) களைப்பில்லாத இன்முகம் கொண்டவர்.

458. ஸூக்ஷ்ம: - ஆழ்ந்த த்யானத்தினால் மட்டும் அறியப்படும் நுண்ணிய தன்மை கொண்டவர் (அமுதம் கொடுத்தபோது அவர் நினைவை அஸுரர்களால் அறிய முடியவில்லை).

459. ஸுகோ$_4$ஷ: - உபநிஷத்துக்களின் சிறந்த ஒலியால் போற்றப்படுபவர் (தேவர்களாலும் அஸுரர்களாலும் போற்றப்படுபவர்).

460. ஸுக$_2$த$_3$: - த்யானமார்க்கத்தவர்களுக்கு நிலைநின்ற இன்பத்தைத் தருபவர்.

461. ஸுஹ்ருத் - தன்னை சிந்தியாதவர்களையும் என் செய்து திருத்துவோம், என்ற நல்லெண்ணம் உடையவர்.



462. மநோஹர: - (மோஹினியாய்) அஸுரர்களையும் மயக்கும் பேரழகு உடையவர்.

463. ஜிதக்ரோத₄: - அடியார்களின் ஆசையையும் கோபத்தையும் போக்குகிறவர் (மோஹினியிடம் மயங்கி அஸுரர்கள் கோபத்தை மறந்தனர்).

464. வீரபா₄ஹு: - கடல்கடைந்தபோது ஆபரணங்கள் பூண்ட ஆயிரம் கைகள் கொண்டவர்.

465. விதா₃ரண: - தன் ஆயுதத்தால் ராஹு முதலானோரை வெட்டியவர்.

466. ஸ்வாபந: - அழியாமல் மீதம் இருந்தவர்களை புன்சிரிப்பாலும் இனிய நோக்காலும் தூங்க வைத்தவர்.

467. ஸ்வவஶ: - அஸுரர்களைத் தூங்க வைத்தவுடன் தன்வசத்திலிருக்கும் தேவர்களோடு மகிழ்பவர்.

468. வ்யாபீ - கடல் கடைய சக்தியை வளர்ப்பதற்காக மந்தரம் வாஸுகி ஆகிய அனைத்திலும் வ்யாபித்தவர்.

469. நைகாத்மா - கடல்கடையும் விஷ்ணுவாக, ஆமையாக, மோஹினியாக பல உருவங்கள் எடுத்தவர்.

470. நைககர்மக்ருத் - கடல் கடைவது, மலையைத் தாங்குவது, அமுதம் அளிப்பது முதலிய பல செயல்களைக் கொண்டவர்.

தர்மத்தின் வடிவம்

471. வத்ஸர: - இறுதிப்பயனை நிலைபெறச்செய்ய அனைவருக்குள்ளும் உறைபவர்.

472. வத்ஸல: - தாய்ப்பசு கன்றை நேசிப்பதுபோல் சரணாகதர்களிடம் பேரன்பு கொண்டவர்.

473. வத்ஸீ - தம்மால் பேணப்பட்ட ஜீவர்களை மிகுதியாக உடையவர்.



474. ரத்நக$_3$ர்ப$_4$: - வேண்டுபவர்களுக்குக் கொடுக்க ரத்னங்களாகிற சிறந்த செல்வத்தை உடையவர்.

475. த$_4$நேஶ்வர: - அவரவர் விரும்பிய செல்வத்தை உடனே அளிப்பவர்.

476. த$_4$ர்மகு$_3$ப் - தான் அளித்த பொருள் தீய வழியில் பயன்படாமல், தர்மத்தைக் காப்பவர்.

477. த$_4$ர்மக்ருத் - தர்மத்தைச் செய்பவர்களுக்கே அருள் புரிபவர்; ஆதலாலனைவரையும் தர்மத்தை செய்யவைப்பவர்.

478. த$_4$ர்மீ - அனைத்து செயல்களுக்கும் தர்மத்தை கருவியாகக் கொண்டவர்.

479. ஸத் - அழியாத்தன்மையும் மங்களமான குணங்களும் எப்போதும் பொருந்தியிருப்பவர்.

480. ஸத$_3$க்ஷரம் - எப்போதும் எங்கும் தன் பண்புகளிலும் இயக்கத்தன்மையிலும் குறைவுபடாதவர்.

481. அஸத் - தீயவர்களுக்கு ஸம்ஸாரத்துன்பத்தைக் கொடுப்பதால் துன்ப வடிவானவர்.

482. அஸத்-க்ஷரம் - அஸுரர்களை எப்போதும் துன்பத்திலேயே வைத்திருப்பவர்.

483. அவிஜ்ஞாதா - மெய்யன்பர்களின் குற்றங்களைக் காணாதவர் (அறியாதவர்).

484. ஸஹஸ்ராம்ஶு: - அளவற்ற அறிவை உடையவர்.

485. விதா$_4$தா - தன் அடியார்களை யமனும் தண்டிக்காதபடி நடத்துபவர்.

486. க்ருதலக்ஷண: - முக்தியடைத்தக்கவர்களுக்கு தாமே (சங்கு சக்கரப் பொறி) அடையாளமிட்டிருப்பவர்.

487. க$_3$ப$_4$ஸ்திநேமி: - ஒளி உடைய, ஆயிரம் முனைகளை உடைய சக்கரத்தை உடையவர்.

488. ஸத்வஸ்த$_2$: - பக்தர்களின் இருதயத்தில் இருந்து கொண்டு யமனிடமிருந்து காப்பவர்.



489. ஸிம்ஹ: – இப்படியிருக்கும் பக்தர்களைத் துன்புறுத்தும் யமனையும் தண்டிப்பவர்.

490. பூ₄தமஹேச்வர: – யமன் பிரமன் முதலானோர்க்கும் தலைவர்.

491. ஆதி₃தே₃வ: – தேவர்களுக்கும் முந்தியவர்; ப்ரகாசிப்பவர்.

492. மஹாதே₃வ: – தேவர்களை விளையாட்டுக்கருவிகளாக வைத்து லீலை புரிபவர்.

493. தே₃வேஶ: – தேவர்களை அடக்கியாளும் சக்ரவர்த்தி.

494. தே₃வப்₄ருத் – தேவர்களைத் தாங்கிக் காப்பாற்றுபவன்.

495. கு₃ரு: – வேதத்தின்படி தேவர்களின் கடமையை உபதேசிப்பவர்.

496. உத்தர: – ஆபத்துக்கடலிலிருந்து தேவர்களைக் கரையேற்றுபவர்.

497. கோ₃பதி: – வேதங்கள், மொழிகள் ஆகிற பேச்சுக்கு தலைவர்.

498. கோ₃ப்தா – அனைத்து வித்யைகளையும் காப்பவர்.

499. ஜ்ஞானக₃ம்ய: – ஸமாதி என்னும் த்யானநிலையால் (பரவித்யையால்) அறியப்படுபவர்.

500. புராதந: – இப்படியே முன் கல்பங்களிலும் வித்யைகளை வெளியிட்டவர்.

501. ஶரீரபூ₄தப்₄ருத் – தனக்கு உடலாக இருக்கும் பஞ்சபூதங்களைத் தாங்குபவர்.

502. போ₄க்தா – தேவர்களுக்குக் கொடுக்கப்படும் ஹவ்யத்தையும், பித்ருக்களுக்குக் கொடுக்கப்படும் கவ்யத்தையும், ஹயக்ரீவராக குதிரை முகத்தோடே உண்பவர்.



தர்மத்தைக் காக்கும் இராமன்

503. கபீந்த்₃ர: – இராமாவதாரத்தில் தனக்கு குரங்கு வடிவில் உதவவந்த தேவர்களுக்குத் தலைவர்.

504. பூ₄ரித₃க்ஷிண: – தான் முன்மாதிரியாக இருந்து, யாகங்களை நடத்தி நிரம்ப தக்ஷிணை கொடுத்தவர்.

505. ஸோமப: – யாகங்களில் தூய ஸோமரஸத்தைப் பருகியவர்.

506. அம்ருதப: – யாகத்தில் அக்நிபகவானுக்குக் கொடுக்கப்பட்டது அமுதமாக மாறி விஷ்ணுவை அடையும். அதைப் பருகியவர்.

507. ஸோம: – தாழ்ந்த அமுதத்தைப்போலல்லாமல் தானே ஆராத அமுதமானவர்.

508. புருஜித் – ஸத்யத்தினால் உலகங்களையும், தானத்தால் ஏழைகளையும், பணிவிடையால் குருக்களையும் – இப்படி அனைவரையும் பலவகைகளில் வென்றவர்.

509. புருஸத்தம: – ஹனுமான்போன்ற சான்றோர்களின் உள்ளத்தில் நிலையாக இருப்பவர்.

510. விநய: – மாரீசன் போன்றோரை அடக்கியவர்.

511. ஜய: – தன் அடியார்களால் ஏவப்படும்படி இருப்பவர், வெல்லப்பட்டவர்.

512. ஸத்யஸந்த₄: – ஸீதையையும் இலக்குவனையும் விட்டாலும் சொன்னசொல் விடாதவர்.

513. தா₃ஶார்ஹ: – பக்தர்கள் தங்களையே ஸமர்ப்பிக்கும்போது அவர்களை ஏற்கத் தகுதியுள்ளவர்.



பாகவதர்களைக் காப்பவன்

514. ஸாத்வதாம்பதி: - ஸாத்வதர்கள் (யாதவர்களையும் குறிக்கும்) என்னும் பாகவதர்களுக்குத் தலைவரானவர்.

515. ஜீவ: - பாகவதர்களுக்கு உயிரளித்து உய்விப்பவர்.

516. விநயிதா - பாகவதர்களை ராஜகுமாரனைப்போல் காப்பவர்.

517. ஸாக்ஷீ - அதற்காக அவர்களின் வளர்ச்சியை நேரே காண்பவர்.

518. முகுந்த$_3$: - பாகவதர்களால் ப்ரார்த்திக்கப்பட்டு முக்தியைக் கொடுப்பவர்.

519. அமிதவிக்ரம: - அனைத்துத் தத்வங்களையும் தாங்கும் அளவிடமுடியாத சக்தி உடையவர்.

ஆதிசேஷமும் கூர்மமும்

520. அம்போ$_4$நிதி$_4$: - கடலுக்கடியில் பாதாளத்தில் ஆமை உருவ பீடமாக உலகையே தாங்குபவர்.

521. அநந்தாத்மா: - ஆமையின்மேல் தூண்போன்ற ஆதிசேஷனுக்கு அந்தராத்மாவானவர்.

522. மஹோதத$_3$தி$_4$ஶய: - ப்ரளயத்தின்போது ஆதிசேஷப்படுக்கையில் படுப்பவர்.

523. அந்தக: - ப்ரளயத்தின்போது இவர் வாயிலிருந்து தோன்றும் தீயில் பிறந்த ருத்ரராலே உலகையே விழுங்குபவர்.



ப்ரணவ (ஓங்கார) வடிவினன்

524. அஜ: – ப்ரணவத்தின் முதலெழுத்தாகிய 'அ' என்பதைக்கொண்டு த்யானிக்கப்படுபவர்.

525. மஹார்ஹ: – பக்தர்கள் ப்ரணவத்தைக்கூறித் தம்மையே ஸமர்ப்பிப்பதை ஏற்றுக்கொள்ளத் தகுதியுடையவர்.

526. ஸ்வாபா$_4$வ்ய: – அடியார்களால் ஸ்வாமியாக (உடையவனாக) நினைக்கப்படுபவர்.

527. ஜிதாமித்ர: – ப்ரணவத்தின் பொருளை உணர்த்தி, அஹங்கார மமகாரங்களான பகைவர்களை ஜெயித்துக்கொடுப்பவர்.

528. ப்ரமோத$_3$ந: – தம் பக்தர்களை மகிழ்வித்து, அதைக்கண்டு தானும் மகிழ்பவர்.

கபில அவதாரம்

529. ஆநந்த$_3$: – தைத்திரீய உபநிஷத்து கூறியபடி, எல்லையற்ற ஆனந்தமே உருவானவர்.

530. நந்த$_3$ந: – தன் ஆனந்தத்தை முக்திபெற்றவர்களுக்கு அளிப்பவர்.

531. நந்த$_3$:– இன்பத்திற்குரிய பொருள்கள், இடங்கள், கருவிகள் மனிதர்கள் ஆகிய அனைத்தாலும் நிரம்பியவர்.

532. ஸத்யத$_4$ர்மா – சரணாகதர்களைக் காக்கும் தன் தர்மத்தை நன்கு நடத்துபவர்.

533. த்ரிவிக்ரம: – தம் பெருமையால் மூன்று வேதங்களையும் வ்யாபித்திருப்பவர்.



534. மஹார்ஷி: - அனைத்து வேதங்களையும் நேராக அறிந்த கபில மூர்த்தியானவர்.

535. கபிலாசார்ய: - கபிலாசார்யராக இருந்து ஸாங்க்ய முறைப்படி தத்வங்களை விளக்கியவர்.

536. க்ருதஜ்ஞ: - அம்சுமான் தன்னை வணங்கியவுடன் அதையே நினைவில் கொண்டு, நன்றியோடு ஸகரனின் அறுபதாயிரம் மகன்களையும் மன்னித்தவர்.

537. மேதி$_3$னீபதி: - கபிலராக உலகத்தையே தாங்கியபடியால் பூமிக்குத் தலைவர்.

538. த்ரிபத$_3$: - அநுபவிக்கப்படும் பொருளான அசித், அநுபவிப்பவனான ஜீவன், இரண்டையும் ஆணையிடுபவரான பகவான், ஆகிய மூன்று தத்துவங்களையும் அறிவிப்பவர்.

வராஹ அவதாரம்

539. த்ரித$_3$ஶாத்$_4$யக்ஷ: - ப்ரளய ஆபத்திலிருந்து முப்பத்திமூன்று தேவர்களையும் வராஹ உருவில் காத்த தலைவர்.

540. மஹாஶ்ருங்க$_3$: - உலகமே சிறு பொருளாக ஒட்டிக்கொள்ளும்படி பெரும் கோரைப்பல்லை (தந்தத்தை) உடையவர்.

541. க்ருதாந்தக்ருத் - யமனைப்போன்ற ஹிரண்யாக்ஷனை ஒழித்தவர்.

542. மஹாவராஹ: - தாமரைக்கண் உடைய பெரிய பன்றி உருவுடையவர்.

543. கோ$_3$விந்த$_4$: - பூமியைக்காத்துத் திரும்பவும் அவளை அடைந்தவர்.



## மேன்மை சொல்லும் ரஹஸ்யமான திருநாமங்கள்

544. ஸுஷேண: – ஐந்து உபநிஷத்து மந்த்ரங்களால் ஆன திருமேனியையே ஸேனையாய்க்கொண்டு அனைவரையும் வசப்படுத்துபவர்.

545. கநகாங்க$_3$தீ$_3$ – திவ்யமான பொன் ஆபரணங்களால் அலங்கரிக்கப்பட்டவர்.

546. கு$_3$ஹ்ய: – உபநிஷத்துக்களுக்குப் பொருளான தன் திருமேனியை மற்றவர்களிடத்திலிருந்து மறைப்பவர்.

547. க$_3$பீ$_4$ர: – ஆழமான பெருமை உடையவர்; தன் சேர்க்கையால் அனைவரின் அறிவின்மையையும் போக்குபவர்.

548. க$_3$ஹந: – நதியின் அடித்தளம் தெரிந்தாலும் ஆழம் தெரியாதாப்போலே, தன் குணங்கள் புலப்பட்டாலும் தான் அளவிறந்த ஆழமுடையவர்.

549. கு$_3$ப்த: – அவன் மாயை அறிந்த ஆசார்யர்களாலே ரஹஸ்யமாக்கப் பாதுகாக்கப்பட்டவர்.

550. சக்ரக$_3$தா$_3$த$_4$ர: – அவர் யாரெனில், சங்கு சக்கரங்களை ஏந்தியவர்.

551. வேதா$_4$: – பலவகைப்பட்ட மங்களமான செயல்களை உடையவர்.

552. ஸ்வாங்க$_3$: – ப்ரபஞ்சத்துக்கே சக்ரவர்த்தி என்பதற்கான அனைத்து அடையாளங்களும் பொருந்தியவர்.

553. அஜித: – அஜிதை என்று பெயர்பெற்ற ஸ்ரீவைகுண்டத்திற்குத் தலைவர்.



554. க்ருஷ்ண: - மேகம் போன்ற கறுத்த நிறம் உள்ளவர்.

555. த்₃ருட₄: - வ்யூஹ ரூபத்திலும் அடியார்க்குக் காணப்படும் திவ்ய உருவம் உடையவர்.

556. ஸங்கர்ஷண: - சித்துக்களையும் அசித்துக்களையும் ஸம்ஹாரத்தின்போது தம்மிடத்தில் லயிக்கச்செய்பவர்.

557. அச்யுத: - பிரமன் முதலான தேவர்களைப்போல் அல்லாமல் வ்யூஹநிலையில் சற்றும் நழுவுதல் இல்லாதவர்.

558. வருண: - பூமியையும் ஆகாயத்தையும் மூடிக்கொண்டிருப்பவர்.

559. வாருண: - அவனிடத்தில் லயிக்கவிரும்பும் நினைவை உடைய அடியார்கள் உள்ளத்தில் இருப்பவர்.

560. வ்ருக்ஷ: - பெரும் மரத்தைப்போல் அடியார்களுக்கு நிழல் தருபவர்.

561. புஷ்கராக்ஷ: - தம் அருளாலே அடியார்களைப்பேணும் திருக்கண்களை உடையவர்.

562. மஹாமனா: - அடியார்களிடம் நிறைந்த மனமும் வள்ளன்மையும் உடையவர்.

563. ப₄க₃வாந் - குற்றமற்றதாய், குணங்களே நிரம்பிய ஸ்வரூபமானதால் பூஜிக்கத்தக்கவர்.

564. ப₄க₃ஹா - முன்னால் கூறியபடி ஜ்ஞானம் பலம் முதலிய ஆறு குணங்களை உடையவர்.

565. நந்தீ₃ - வ்யூஹத்தில் ஸங்கர்ஷணனாக இருந்தவர், விபவத்தின்போது நந்தனின் மகனாக பலராமனாகப் பிறந்தவர்.

566. வநமாலீ - பஞ்சபூதங்களின் தேவதையான வைஜயந்தீ என்று பெயர்பெற்ற வனமாலை அணிந்தவர்.



567. ஹலாயுத$_4$: - சித் அசித்துக்களை வளர்ப்பதற்காக உழும் கலப்பையை ஏந்தியவர்.

568. ஆதி$_3$த்ய: - "ஆ" என்னும் ஸங்கர்ஷண பீஜமந்த்ரத்தால் அடையத்தக்கவர்.

569. ஜ்யோதிராதி$_3$த்ய: - ஒளிபடைத்த ஸுர்யனே ஆதித்யன். அவனே இருண்டுபோகும் சோதியுருவம் கொண்ட நாராயணனாகப் பிறந்தவர்.

570. ஸஹிஷ்ணு: - ருத்ரனுக்கும், நாராயணனுக்கும் சண்டை மூண்டபோது அதில் ஏற்பட்ட குற்றங்களைப் பொருத்தவர்.

571. க$_3$திஸத்தம: - ஆசார்யனாக இருந்து தர்மமார்க்கத்தைக் காட்டுபவர்.

572. ஸுத$_4$ந்வா - அமுதத்தைப் பிரித்தபோது, தேவர்களுக்கும் அஸுரர்களுக்கும் நடந்த சண்டையை தன் வில்லால் நிறுத்தியவர்.

573. க$_2$ண்ட$_3$பரஶு: - உடைந்த கோடாரியை ஆயுதமாகக் கொண்டவர்.

574. தா$_3$ருண: - உட்பகைவர்களையும் வெளிப்பகைவர்களையும் பிளப்பவர்.

வ்யாஸ அவதாரம்

575. த்$_3$ரவிணப்ரத$_3$: - சாஸ்த்ரமாகிற செல்வத்தை நிரம்பக் கொடுப்பவர்.

576. தி$_3$விஸ்ப்ருக் - தன் சிறந்த அறிவினால் பரமபத்தில் இருக்கும் தன் இயற்கைத் தன்மையையும் தொடுபவர் (அறிபவர்).

577. ஸர்வத்$_3$ருக் - அனைத்தையும் பார்த்து அறியக்கூடிய வித்வான்; முழுமையான அறிவுடையவர்.



578. வ்யாஸ: - வேதங்களைப் பிரித்துக்கொடுத்த வ்யாஸ உருவானவர்.

579. வாசஸ்பதி: - ஐந்தாம் வேதமாகப் போற்றப்படும் மஹாபாரதத்திலுள்ள சொற்களுக்குத் தலைவர்.

580. அயோநிஜ: - ஸாரஸ்வத அவதாரத்தில் பெருமானின் பேச்சிலிருந்து பிறந்தபடியால் கர்ப்பத்திலிருந்து பிறவாதவர்.

581. த்ரிஸாமா - ப்ருஹத், ரதந்தரம், வாமதேவ்யம் என்னும் மூன்று ஸாமங்களால் பாடப்படுபவர்.

582. ஸாமக₃: - மகிழ்ச்சியோடு அந்த ஸாமங்களைத் தானே பாடுபவர்.

583. ஸாம: - அவன் பெருமையைப் பாடுபவர்களுடைய வினைகளைப் போக்குபவர்.

584. நிர்வாணம் - பாவம் விலகியவர்களின் உயர்கதிக்குக் காரணமானவர்.

585. பே₄ஷஜம் - ஒழிக்க முடியாத ஸம்ஸாரமாகிய நோய்க்குச் சிறந்த மருந்து.

586. பி₄ஷக் - நோய்நாடி நோய் முதல்நாடும் அற்புத மருத்துவர்.

587. ஸங்யாஸக்ருத் - ஶரணாகதர்களின் ரஜோகுண தமோகுணத்தை அறிந்து சிகித்ஸை பண்ணும் மருத்துவர்.

588. ஶம: - ஆசை, பயம், கோபம் ஆகியவற்றை அடக்க உபதேசிப்பவர்.

589. ஶாந்த: - அலைபோல் தன் பெருமை பொங்கினாலும் அலையில்லாக்கடல்போல் சாந்தமாக இருப்பவர்.



தர்மத்தின்படி பயன் அளிப்பவன்

590. நிஷ்டா$_2$ - தன்னிடம் ஒருமுகப்படுத்தப்பட்ட மனத்தைத் தன் திருமேனியில் நிலைநிறுத்துபவர்.

591. ஶாந்தி: - ஸமாதிநிலையில் ஏனைய தொழில்களை மறந்து தன்னையே அநுபவிக்கச் செய்பவர்.

592. பராயணம் - முக்திக்கு நேர்வழியான சிறந்த பக்தியைத் தாமே அளிப்பவர்.

593. ஶுபா$_4$ங்க: - ஸமாதிநிலையை அடைவதற்காக யோகத்தின் எட்டு அங்கங்களையும் அருளுபவர்.

594. ஶாந்தித$_3$: - அவர்களின் பிறவிச் சுழலை அறுத்து, தம்மை அளித்து, சாந்தியைக் கொடுப்பவர்.

595. ஸ்ரஷ்டா - முக்தி விரும்பியவர்களை ஸம்ஸாரத்திலிருந்து விடுவிக்கும்போது, ஏனையோரை கர்மத்தின்படி படைப்பவர்.

596. குமுத$_3$: - அடியார்களுக்குக் காண்தல், கேட்டல் ஆகிய இவ்வுலக இன்பங்களை அளித்து மகிழ்பவர்.

597. குவலேஶய: - குவலர் எனப்படும் ஜீவர்களை ஆள்பவர்.

598. கோ$_3$ஹித: - ஸம்ஸார விதையை விதைத்து, இவ்வுலகை வளர்ப்பவர்.

599. கோ$_3$பதி: - ஜீவர்கள் இன்பம் துய்க்கும் ஸ்வர்க்கத்திற்குத் தலைவர்.

600. கோ$_3$ப்தா - வினைகளின் பயன்களைக் கொடுத்துக் காப்பவர்.

601. வ்ருஷபா$_4$க்ஷ: - ஸம்ஸாரமென்னும் சக்கரத்திற்கு தர்மமென்னும் அச்சுப்போன்றவர்.

602. வ்ருக்ஷப்ரிய: - உலக வாழ்க்கையை நீடிக்கும் ப்ரவ்ருத்தி தர்மம், முடிக்கும் நிவ்ருத்தி தர்மம் ஆகிய இரண்டிலும் அன்பு செலுத்துபவர்.



603. அநிவர்த்தீ - ப்ரவ்ருத்தி தர்மத்தில் ஈடுபட்டவர்களை ஸம்ஸாரத்தை விட்டு விலக்காதவர்; தூமாதி மார்க்கத்தில் செல்பவன் திரும்பப் பிறக்கிறான்.

604. நிவ்ருத்தாத்மா - நிவ்ருத்தி தர்மத்தில் இருக்குமவர்களுக்கும் ஆத்மாவாக இருப்பவர்.

605. ஸங்க்ஷேப்தா - ப்ரவ்ருத்தி தர்மத்திலிருக்குமவரின் அறிவைக் குறைப்பவர்.

606. க்ஷேமக்ருத் - நிவ்ருத்தி தர்மத்தில் இருப்பவர்களின் அறிவை விரிப்பவர்.

திருமகள் நாதனே பரதெய்வம்

607. ஶிவ: - இவ்வுலக போகத்தையும் முக்தியையும் விரும்பும் யாவர்க்கும் தக்க நன்மைகளைச் செய்பவர்.

608. ஸ்ரீவத்ஸவக்ஷா: - ஸ்ரீவத்ஸம் என்னும் மருவை தன் மார்பில் அடையாளமாகக் கொண்டவர்; இந்த மருவைப் பீடமாகக் கொண்டே ஸ்ரீமஹாலக்ஷ்மி வீற்றிருக்கிறாள்.

609. ஸ்ரீவாஸ: - ஸ்ரீதேவி விளையாடி இன்புறும் தோட்டமான மார்பை உடையவர்.

610. ஸ்ரீபதி: - ஸ்ரீதேவிக்குத் தகுந்த கணவர்.

611. ஸ்ரீமதாம்வர: - லக்ஷ்மீகடாக்ஷம் உடைய நான்முகன் முதலான அனைவரையும் விடச் சிறந்தவர்.

612. ஸ்ரீத₃: - அப்பொழுதைக்கப்பொழுது புதியதான அன்பை திருமகளுக்கு அளிப்பவர்.

613. ஸ்ரீஶ: - பிராட்டியின் பெருமைக்கே காரணமானவர்; திருவுக்கும் திரு.

614. ஸ்ரீநிவாஸ: - கற்பகக்கொடி மரத்தைச் சார்ந்திருப்பதுபோல் லக்ஷ்மிக்கு கொழுகொம்பாக இருப்பவர்.



615. ஶ்ரீபதி: – ரத்தினத்திற்குப் பேழைபோல் பிராட்டியைத் திருமார்பில் கொண்டவர்.

616. ஶ்ரீவிபா₄வந: – பிராட்டியின் தொடர்பால் பெருமையால் வளர்பவர்.

617. ஶ்ரீத₄ர: – மாணிக்கம் ஒளியையும் பூ மணத்தையுப் பிரியாதாற்போல் தான் லக்ஷ்மியைப் பிரியாதவர்.

618. ஶ்ரீகர: – பரரூபத்தைப்போல் வ்யூஹத்திலும் லக்ஷ்மியைப்பிரியாமல் பிறப்பவர்.

619. ஶ்ரேய:ஶ்ரீமாந் – பக்தர்கள் தங்கள் பயன்களுக்காக வேண்டிக்கொள்ளும் பிராட்டிக்கே நாதன்.

620. லோகத்ரயாஶ்ரய: – ஜகந்மாதாவான பிராட்டியோடு கூடி மூவுலகங்களுக்கும் தந்தையாய் இருப்பவர்.

621. ஸ்வக்ஷ: – பிராட்டியின் அழகைப்பருகும் திருக்கண்கள் உடையவர்.

622. ஸ்வங்க₃: – பிராட்டியே ஆசைப்படும் திருமேனி அழகு உடையவர்.

623. ஶதாநந்த₃: – இருவருக்குள்ளும் வளரும் அன்பினால் எல்லையில்லா ஆனந்தம் உடையவர்.

624. நந்தி₃: – எங்கும் எப்போதும் எல்லா வகைகளிலும் அவளோடு ஆனந்தப்படுபவர்.

625. ஜ்யோதிர்கணேஶ்வர: – தங்களிருவருக்கும் விஷ்வக்ஸேனர் ஆதிசேஷன் முதலானோரால் தொண்டுசெய்யப் பெற்றவர்.

626. விஜிதாத்மா – திருமகளைப் பிரியாதபோதும் பக்தர்களிடத்திலேயே உள்ளத்தை வைத்தவர்.

627. விதே₄யாத்மா – இங்கு வா, அங்கு நில், இங்கு உட்கார், இதை உண் என்று பக்தர்கள் கட்டளையிடும்படி அடங்கி இருப்பவர்.

628. ஸத்கீர்த்தி: – இப்படிப்பட்ட எளிமையினால் தூயபுகழ் படைத்தவர்.



629. சி₂ந்நஸம்ஶய: - இவரை அறியமுடியுமா முடியாதா? பெரியவரா எளியவரா? என்ற ஐயங்களை அறுப்பவர்.

கண்களுக்குப் புலனாகும் விக்ரஹ உருவம் (அர்ச்சை)

630. உதீ₃ர்ண: - அனைவரும் கண்ணால் காணும்படி அவதரிப்பவர்.

631. ஸர்வதஶ்சக்ஷு: - அவதாரத்திற்குப் பிற்பட்டவர்களுக்கும் அர்ச்சை உருவில் (விக்ரஹ வடிவில்) கோயில்கொண்டு அனைவராலும் தரிசிக்கப்படுபவர்.

632. அநீஶ: - நீராடவும் உண்ணவும் பிறரை எதிர்பார்க்கிறபடியால் அர்ச்சையில் சுதந்திரமாய் இல்லாதவர்.

633. ஶாச்வதஸ்தி₂ர: - அவதாரங்களைப்போல் முடிந்துபோகாமல் அர்ச்சையில் பல வடிவங்களில் எக்காலமும் இருப்பவர்.

634. பூ₄ஶய: - கோயில்களில் பக்தர்கள் வேண்டுகோளுக்கு இணங்க பூமியிலேயே சயனித்தவர்.

635. பூ₄ஷண: - எளிமை குணத்தால் அலங்கரிக்கப்பட்டவர்.

636. பூ₄தி: - தன் பக்தர்களுக்கு உலகச்செல்வம் மற்றும் பக்திச்செல்வம் ஆகிய அனைத்துமாய் இருப்பவர்.

637. அஶோக: - தன் அடியார்களைக் காக்கிறபடியால் சோகம் (துன்பம்) அற்று இருப்பவர்.

638. ஶோகநாஶந: - இவனைப்பிரிவதே துன்பம் என்றிருக்கும் பக்தர்கள் நடுவே இருந்து, அந்தத்துன்பத்தைப் போக்குமவர்.

639. அர்ச்சிஷ்மாந் - பக்தர்களின் உட்கண்ணையும் வெளிக்கண்ணையும் திறக்கும் ஒளிபடைத்தவர்.



640. அர்ச்சித: - புண்ய க்ஷேத்ரங்களிலும் வீடுகளிலும் கண்ணால் காணும்படி அர்ச்சை வடிவைக் கொண்டவர்.

641. கும்ப$_4$: - அடியார்களுக்குப் பழகின வடிவத்தில் ஒளிவிடுபவர்.

642. விஶுத்$_3$தா$_4$த்மா - தன்னிடம் பக்தர்கள் அனைவரும் அனைத்தையும் அநுபவிக்கும்படி பாகுபாடில்லாத தூய உள்ளம் உடையவர்.

643. விஶோத$_4$ந: - புண்ய க்ஷேத்ரங்களில் உடலை விட்டவர்களின் வினையை முடித்துத் தூய்மைப்படுத்துபவர்.

644. அநிருத்$_3$த$_4$: - அநிருத்தனான தான் வஸுபாண்டம் என்னும் க்ஷேத்ரத்தில் ஜநார்தனர் வடிவில் இருப்பவர்.

645. அப்ரதிரத$_2$: - ஜநார்த்தனராய் தீயவர்களை அழிப்பதில் தன்னிகரற்றவர்.

646. ப்ரத்$_3$யும்ந: - தானே ஒளிவிடும் புருஷோத்தமனாய் இருப்பவர் (புரீஜகந்நாத க்ஷேத்ரம்).

647. அமிதவிக்ரம: - எல்லையில்லாத த்ரிவிக்ரம அவதாரம் எடுத்தவர் (யமுனைக்கரை க்ஷேத்ரம்).

648. காலநேமிநிஹா - காலசக்ரத்தின் நேமியாகிய அறிவின்மையை ஒழிப்பவர்.

649. ஶௌரி: - சௌரி என்று பெயர்பெற்ற வஸுதேவரின் மகன் (திருக்கண்ணபுரம் சௌரிராஜப்பெருமாள்).

650. ஶூர: - அரக்கர்களை அழிக்கும் சூரனான இராமன் (சித்ரகூடம்).

651. ஶூரஜநேஶ்வர: - சூரர்க்களுக்கெல்லாம் தலைவர்.



652. த்ரிலோகாத்மா - தெய்வங்களுக்கெல்லாம் தலைவர் மகததேசத்தில் மஹாபோதம் என்னும் கயா க்ஷேத்ரத்தில் இருப்பவர்.

653. த்ரிலோகேஶ: - மூன்று உலகங்களுக்கும் தலைவர்; ப்ராக்ஜ்யோதிஷபுரம் என்னும் இடத்தில் விஶ்வேஶ்வரன் என்னும் பெயரோடு கோயில் கொண்டவர்.

654. கேஶவ: - க்லேசங்களைப் (துன்பங்களை) போக்குபவர்; அல்லது 'க' எனப்படும் நான்முகனுக்கும் 'ஈசன்' எனப்படும் ருத்ரனுக்கும் தலைவர்; வடமதுரையிலும் வாராணஸியிலும் இருப்பவர்.

655. கேஶிஹா - கேஶி என்னும் அஸுரனை அழித்தவர்.

656. ஹரி: - பாபங்களைப் போக்குபவர்; பச்சை நிறமானவர்; கோவர்த்தன மலையில் இருப்பவர்.

657. காமதே₃வ: - ஹிமாசலத்தில் சங்கராலயத்தில் அப்ஸரஸ்ஸுக்களால் வணங்கப்படும் பேரழகு உடையவர்.

658. காமபால: - தன் அடியார்களுக்கு கொடுத்த பயன்களைக் காப்பவர்.

659. காமீ - அனைவராலும் விரும்பப்படுபவர்.

660. காந்த: - தன் பேரழகால் காந்தம்போல் அனைவரையும் ஈர்ப்பவர்.

*ஶக்தீஶ அவதாரம்*

661. க்ருதாக₃ம: - வேத, ஆகம மந்த்ரங்களில் மறைந்திருக்கும் தன்னை வெளிப்படுத்துமவர்.

662. அநிர்தே₃ஶ்யவபு: - இப்படியென்னும் சொல்லமுடியாத திவ்ய வடிவை உடையவர்.



663. விஷ்ணு: - எங்கும் நிறைந்திருத்தல், ஆணை செலுத்துதல் ஆகிய சக்தியால் உலகம் முழுவதும் விரிந்திருப்பவர்,

664. வீர: - துஷ்டர்களை அழிக்கும் வீரமுடையவர்.

ப்ரஹ்மம் பூசிக்கத்தக்க நற்பண்புகளையுடையவன்

665. அநந்த: - முடிவில்லாதவர்; இடத்தாலும் காலத்தாலும் பொருளாலும் முடிவில்லாதவர்.

666. த₄நஞ்ஜய: - செல்வத்தில் உள்ள ஆசையை ஜயித்து, அவனையே விரும்பும்படி இருப்பவர்.

667. ப்₃ரஹ்மண்ய: - சித்துக்களும் அசித்துக்களும் இருப்பதற்கே காரணமாக இருப்பவர்.

668. ப்₃ரஹ்மக்ருத் ப்₃ரஹ்மா - பெருத்த உலகைப்படைக்கும் நான்முகனையும் செலுத்துபவர்.

669. ப்₃ரஹ்ம - மிகப்பெரியவர்; தன்னை அண்டியவரையும் பெரிதாக்குபவர்.

670. ப்₃ரஹ்மவிவர்த₄ந: - தர்மத்தின் வகையான தவத்தை வளர்ப்பவர்.

671. ப்₃ரஹ்மவித் - எண்ணிறந்த வேதங்களின் ஆழ்பொருளை அறிபவர்.

672. ப்₃ராஹ்மண: - வேதங்களைப் ப்ரசாரம் செய்ய அத்ரி கோத்ரத்தில் தத்தாத்ரேயனென்னும் அந்தணனாகப் பிறந்தவர்.

673. ப்₃ரஹ்மீ - வேதமாகிய ப்ரமாணத்தையும் அவை உரைக்கும் பொருளாகிய ப்ரமேயத்தையும் உடையவர்.

674. ப்₃ரஹ்மஜ்ஞ: - வேதங்களையும் வேதப்பொருளையும் அறிபவர்.

675. ப்₃ராஹ்மணப்ரிய: - வேதம் ஓதும் அந்நணர்களிடம் அன்பு காட்டுபவன்.



676. மஹாக்ரம: - ஜீவர்கள் தன்னை அடைவதற்கு அறிவிலும் பக்தியிலும் படிப்படியாக ஏற வழி வைத்திருப்பவர்.

677. மஹாகர்மா - புழு பூச்சிகளையும் அடுத்தடுத்த பிறவிகளில் உயர்ந்து, தன்னையே அநுபவிக்க ஆசைப்படவைக்கும் செயல்களை உடையவர்.

678. மஹாதேஜ: - தமோகுணத்தால் பிறவிச் சுழலில் சிக்கியிருக்கும் மனிதர்களின் அறிவின்மையாகிற இருளை ஒழிக்கும் ஒளியுள்ளவர்.

679. மஹோரக$_3$: - தான் மஹானாக இருந்தும், தாழ்ந்த பிறவிகளின் இருதயத்திலும் அவர்களை உயர்த்துவதற்காக நுழைந்து இருப்பவர்.

680. மஹாக்ரது: - பூசிப்பதற்கு எளியவர்; செல்வத்தைப் பாராமல் தூய பக்தியை நோக்குபவர்.

681. மஹாயஜ்வா - தன்னையே பூசிப்பவர்களை உயர்த்துபவர்.

682. மஹாயஜ்ஞ: - திருப்பள்ளியெழுச்சி, நீராட்டம், அலங்காரம், நைவேத்யம் ஆகியவற்றை மிகுதியாக உடையவர்.

683. மஹாஹவி: - மனம், புத்தி, புலன், ஆத்மா ஆகியவற்றையே ஸமர்ப்பணமாக ஸாத்விகர்களிடம் ஏற்றுக்கொள்பவர்; மற்ற பலிகளை ஏற்காதவர்.

தோத்திரத்தை ஏற்கும் தகுதி உடையவன்

684. ஸ்தவ்ய: - தோத்திரம் செய்வதற்குத் தகுதியானவர்.



685. ஸ்தவப்ரிய: - யார் எந்த மொழியால் தோத்திரம் செய்தாலும், பிழையிருந்தாலும் அன்புடன் ஏற்பவர்.

686. ஸ்தோத்ரம் - அவர் அருளாலேயே துதிப்பதால், துதியாகவும் இருப்பவர்.

687. ஸ்துத: - ஆதிசேஷன் கருடன் முதலான நித்யர்களாலும், பிரமன் முதலான தேவர்களாலும், நம் போன்ற மக்களாலும் அவரவர் தகுதிக்கேற்பத் துதிக்கப்படுபவர்.

688. ஸ்தோதா - தம்மைத் துதிப்பவரைத் தாமே துதிப்பவர்.

689. ரணப்ரிய: - தன் அடியார்களைக் காக்க விருப்பத்தோடு சண்டையிடுபவர்.

690. பூர்ண: - எந்த விருப்பமும் இன்றி நிறைவானவர்; ஆகையாலேயே துதிக்கே மகிழ்பவர்.

691. பூரயிதா - தன்னைத் துதிப்பவர்களின் விருப்பங்களை நிறைவேற்றுபவர் (ஆகவே துதிக்கு மயங்குவார் என்று நினைப்பது தவறு, நமக்குப் பயனளிக்கவே நம் துதியை ஏற்கிறார்).

692. புண்ய: - மஹாபாபிகளையும் தூய்மைப்படுத்தி தம்மைத் துதிக்கவைப்பவர்.

693. புண்யகீர்த்தி: - பாவங்களைத் தொலைக்க துதியே போதும் என்னும் புகழ்பெற்றவர்.

694. அநாமய: - ஸம்ஸாரமென்னும் நோய்க்கு பகைவர்; ஆரோக்யம் அருளுபவர்.

695. மநோஜவ: - மேற்கூறிய செயலை மிக விரைவில் செய்பவர்.

696. தீர்த்தகர: - பாவங்களைப்போக்கும் கங்கை, புஷ்கரம் ஆகிய புண்யதீர்த்தங்களை உருவாக்குபவர்.



ஸ்ரீக்ருஷ்ண அவதாரம்

697. வஸுரேதா – தன் பிறப்பிற்குக் காரணமான திவ்யமான ஒளியானவர்.

698. வஸுப்ரத₃: – தேவகிக்கும் வஸுதேவருக்கும் தன்னையே செல்வமாகக் கொடுத்தவர்.

699. வஸுப்ரத₃: – தன்னைப் பெற்றபடியால் தேவகிக்கும் வஸுதேவருக்கும் புகழ்ச்செல்வத்தைக் கொடுத்தவர்.

700. வாஸுதே₃வ: – வஸுதேவரின் மைந்தன்.

701. வஸு: – பாற்கடலில் வஸித்து, வடமதுரையில் கண்ணனாகப் பிறந்தவர்.

702. வஸுமநா: – வஸுதேவரிடத்தில் மனம் வைத்தவர்.

703. ஹவி: – கம்ஸனுக்கு அஞ்சி வஸுதேவரால் நந்தகோபனிடம் வளர்ப்பதற்குக் கொடுக்கப்பட்டவர்.

704. ஸத்₃க₃தி: – பிறக்கும்போதே அஸுரர்களை அழித்து பக்தர்களைக் காப்பவர்.

705. ஸத்க்ருதி: – ஸம்ஸார விலங்கை அறுக்கும் சிறு விளையாட்டுக்களை (வெண்ணை திருடியது, கட்டுண்டது) உடையவர்.

706. ஸத்தா – அனைவரும் இருப்பதற்கே ஆதாரமானவர்.

707. ஸத்₃பூ₄தி: – ஸாதுக்களுக்கு அனைத்து உறவாகவும் செல்வமாகவும் இருப்பவர்.

708. ஸத்பராயண: – பாண்டவர்கள் போன்ற ஸாதுக்களுக்கு அடையும் இடமாக இருப்பவர்.

709. ஶூரஸேந: – யாதவர்கள், பாண்டவர்கள் போன்றோரை தீயவரை ஒழிக்கும் செயலுக்குச் சேனையாகக் கொண்டவர்.



710. யது$_3$ஶ்ரேஷ்ட$_2$: - பட்டாபிஷேகம் இழந்த யதுகுலத்தை உயர்த்தினபடியால் யாதவர்களுள் சிறந்தவர்.

711. ஸந்நிவாஸ: - ஸநகர் முதலான சான்றோர்களுக்கு இருப்பிடமானவர்.

712. ஸுயாமுந: - தூயபெருநீர் யமுனையாற்றின் கரையில் ஜலக்ரீடை பூக்கொய்தல் போன்ற விளையாட்டுக்களைச் செய்தவர்.

713. பூ$_4$தாவாஸ: - எல்லா ஜீவராசிகளுக்கும் தங்குமிடமானவர்.

714. வாஸுதே$_3$வ: - பன்னிரண்டு எழுத்துக்கள் கொண்ட வாஸுதேவ மந்த்ரத்தால் கூறப்படுபவர்.

715. ஸர்வாஸுநிலய: - அனைத்து ஜீவர்களுக்கும் இருப்பிடம்; இவன் இன்றி இன்பம் இல்லை.

716. அநல: - அடியார்களுக்கு எத்தனை செய்தாலும், போதும் என்ற மனம் இல்லாதவர்; த்ரௌபதிக்கு அத்தனையும் செய்தும், ஒன்றும் செய்யவில்லையே என்று ஏங்கியவர்.

717. த$_3$ர்பஹா - கோவர்த்தன மலையைத் தூக்கியது போன்ற செயல்களால் தேவர்களின் கர்வத்தை அடக்கியவர்.

718. த$_3$ர்பத$_3$: - தன் வீரச்செயல்களைக் கண்ட யாதவர்களுக்குச் செருக்கை ஊட்டியவர்.

719. அத்$_3$ருப்த: - நிகரற்ற தன் பெருமையாலும் செருக்குக் கொள்ளாதவர்.

720. து$_3$ர்த$_4$ர: - சிறு பிராயத்து விளையாட்டுக்களிலும், தன் பெற்றோரால் பிடிக்க முடியாதவர்; தீயவர்களாலும் பிடிக்க முடியாதவர்.



721. அபராஜிதः - வெல்லப்படமுடியாதவர்; பக்தர்களான பாண்டவர்களையும் வெல்லப்பட முடியாதவர்களாகச் செய்தவர்.

722. விச்வமூர்த்தி: - உலகையே தன் திருமேனியாகக் கொண்டவர்; ஆகையால் எந்த ஒரு உறுப்பையும் வீணாக விடமாட்டார்.

723. மஹாமூர்த்தி: - உலகமே தன்னுள் அடங்கும் பெரும் திருமேனி உடையவர்.

724. தீ₃ப்தமூர்த்தி: - உலகில் ஒளிபடைத்த எதையும் தன் திருமேனியில் அம்சமாகக் கொண்டவர்.

725. அமூர்த்திமாங் - பெயர், உருவ வேறுபாடு இன்றி ஸூக்ஷ்ம நிலையில் இருக்கும் ப்ரக்ருதி ஜீவர்கள் ஆகியோருக்கு ஸ்வாமியானவர்.

726. அநேகமூர்த்தி: - கண்ணனாகப் பிறந்தபோதும், தானே வாஸுதேவன், பலராமனே ஸங்கர்ஷணன், மகனே ப்ரத்யும்நன், பேரனே அநிருத்தன் - என பல உருவங்கள் கொண்டவர்.

727. அவ்யக்தः - மனித உருவில் பிறந்தபடியால் மேற்கண்ட பெருமையெல்லாம் மறைந்திருப்பவர்.

728. ஶதமூர்த்தி: - விச்வரூபத்தின்போது அர்ஜுநனுக்குக் காட்டப்பட்ட பல நூறு உருவங்கள் கொண்டவர்

729. ஶதாநநः - அப்போதே பலநூறு முகங்கள் கொண்டவர்.

730. ஏகः - தன் பெருமையில் தன்னிகரற்றபடியால் ஒருவரானவர்.

731. நைகः - அவன் உடைமைகளுக்கு முடிவில்லாதபடியால், ஒன்றாய் இல்லாமல் பலவானவர்.

732. ஸः - க்ருஷ்ணாவதாரத்தில் தன்னைப்பற்றிய உறுதியான அறிவை சிறுவர்களுக்கும் விளைத்தவர்.



733. வ: - அனைத்தும் தன்னிடத்தில் வஸிப்பவர்; தான் அனைத்திலும் வஸிப்பவர்.

734. க: - சேற்றில் விழுந்த மாணிக்கம் ஒளிவிடாது; ஆனால் பகவான் ஸம்ஸாரத்தில் பிறந்தாலும் ஒளி குறையாதவர்.

735. கிம் - அனைவராலும் 'எப்படிப்பட்டவரோ' ! என்றறியத் தேடப்படுபவர்.

736. யத் - தன்னைத்தேடும் அடியார்களைக் காக்க எப்போதும் முயற்சி செய்பவர்.

737. தத் - அடியார்களுக்கு தன்னைப் பற்றிய அறிவையும் பக்தியையும் வளர்ப்பவர்.

738. பத$_1$மநுத்தமம் - தனக்கு மேலானது இல்லாத சிறந்த அடையும் இடமானவர்.

739. லோகப$_3$ந்து$_4$: - உலகத்தார் அனைவரோடும் அறுக்க முடியாத உறவு கொண்டவர்.

740. லோகநாத$_2$: - உலகத்துக்கே தலைவர்; ஆகையால் அனைவருக்கும் உறவானவர்.

741. மாத$_4$வ: - மஹாலக்ஷ்மிக்குக் கணவர்; ஆகவே இருவருமாக நமக்குத் தாயும் தந்தையுமான உறவை உடையவர்கள்.

742. ப$_4$க்தவத்ஸல: - தன்னை உறவாக எண்ணும் பக்தர்களிடம் சிறந்த அன்புள்ளவர்.

743. ஸுவர்ணவர்ண: - தங்கம் போன்ற நிறமும் மேன்மையும் உடையவர்.

744. ஹேமாங்க$_3$: - பொன்னிறமான அங்கங்கள் உடையவர்.

745. வராங்க$_3$: - உபநிஷத்துக்களால் பேசப்படும் சிறந்த அடையாளங்களை மறைக்காமலே, தேவகியின் விருப்பப்படி பிறந்தவர்.



746. சங்த₃நாங்க₃தீ₃ - மகிழ்ச்சியைக்கொடுக்கும் தோள்வளைகள் முதலிய ஆபரணங்களை அணிந்திருப்பவர்.

747. வீரஹா - பால்குடிக்கும் சிறு குழந்தைப்பருவத்திலும், பூதனை சகடாஸுரன் முதலிய அஸுரர்களை ஒழித்தவன்.

748. விஷம: - ஸாதுக்களுக்கு நன்மையையும் தீயவர்களுக்குத் பயத்தையும் கொடுப்பதால் வேற்றுமை உள்ளவர்.

749. ஶூந்ய: - மனிதனாகப் பிறந்தபோதும் எக்குற்றமும் அற்றவர்.

750. க்₄ருதாஶீ:- தமது நற்பண்புகளைத் தெளித்து, உலகை வாழ்விப்பவர்.

751. அசல: - துர்யோதனன் முதலான தீயவர்களால் அசைக்கமுடியாதவன்.

752. சல: - தன் அடியவரின் சொல்லை மெய்யாக்க, தன் சொல்லை பொய்யாக்கவும் தயங்காதவர், பீஷ்மருக்காக ஆயுதம் எடுத்தார்.

753. அமாநீ - பக்தர்கள் விஷயத்தில் தன் மேன்மையைப் பார்க்காதவர்; பாண்டவர்களுக்காகத் தூது சென்றார்.

754. மாநத₃: - பக்தர்களுக்கு கௌரவம் கொடுப்பவர்.

755. மாந்ய: - பக்தர்களுக்குக் கீழ்ப்படிந்து அவர்களுக்கு மேன்மை தருபவர்.

756. லோகஸ்வாமீ - தன்னைத் தாழ்த்திக்கொண்டாலும் எப்போதுமே உலகங்களுக்கெல்லாம் தலைவர்.



757. த்ரிலோகத்$_4$ருக்: - மூன்று உலகங்களையும் தாங்குபவர்; ஆகையாலேயே உலகத்தார்க்கு எளியவர்.

758. ஸுமேதா: - தம்மைப் பூசிப்பவர்களுக்கு நன்மையைத் தரும் நல்லெண்ணம் உடையவர்.

759. மேத$_4$ஜ: - முன் ஜன்மத்தில் தேவகி செய்த தவத்தின் பயனாக அவதரித்தவர்.

760. த$_4$ந்ய: - அடியார்களின் ப்ரார்த்தனைக்காகப் பிறந்ததை தனக்குப் பெரும் பேராகக் கருதுபவர்.

761. ஸத்யமேதா$_4$: - யாதவர்களுக்குள் ஒருத்தனாக மெய்யாக நினைத்து வெளிக்காட்டியவர்.

762. த$_4$ராத$_4$ர: - ஏழு வயதுச் சிறுவனாக, தன் சுண்டுவிரலாலே கோவர்த்தன மலையைத் தூக்கி, ஏழு நாட்கள் குடையாகப் பிடித்தவர்.

763. தேஜோவ்ருஷ: - அன்பர்களைக் காப்பதில் தன் சக்தியைப் பொழிபவர்.

764. த்$_3$யுதித$_4$ர: - சிறு கண்ணனாக இந்திரனையும் அடக்கும் திவ்ய சக்தி உள்ளவர்.

765. ஸர்வஶஸ்த்ரப்$_4$ருதாம்வர: - ஆயுதங்களை தரிப்பவர்களுள் சிறந்தவர்.

766. ப்ரக்$_3$ரஹ: - தான் தேரோட்டியாக இருந்து, கடிவாளத்தால் குதிரைகளைக் கட்டுப்படுத்தியவர்; தன் சொல்லால் அர்ஜுனனைக் கட்டுப்படுத்தியவர்.

767. நிக்$_3$ரஹ: - அர்ஜுனனின் வல்லமையை எதிர்பார்க்காமல், தன் தேரோட்டும் திறனாலேயே பகைவர்களை அடக்கியவர்.



768. வ்யக்₃ர: - அர்ஜுனன் வெல்லும்வரை பொறுமையில்லாமல் பகைவர்களை தாமே அழிக்கப் பரபரத்தவர்.

769. நைகஶ்ருங்க₃: - எதிரிகளை வெல்ல, பல வழிமுறைகளைக் கையாண்டவர்.

770. க₃தா₃க்₃ரஜ: - வஸுதேவரின் மனைவியான ஸுநாமை என்பவரின் மகனான கதனுக்கு முன்பிறந்தவர்.

அவதாரத்திற்கு காரணமான வ்யூஹம்

771. சதுர்மூர்த்தி: - கண்ணனானபோதும் வ்யூஹத்தைப்போல் வாஸுதேவன், பலராமன், ப்ரத்யும்னன் அநிருத்தன் என்ற நான்கு வடிவங்கள் உடையவர்.

772. சதுர்பா₃ஹு: - தேவகியின் கர்ப்பத்திலிருந்து பிறந்தபோதே நான்கு கைகள் உடையவர்.

773. சதுர்வ்யூஹ: - வ்யூஹத்தைப்போலவே நான்கு வடிவங்களிலும், ஜ்ஞானம், பலம் முதலான குணங்களை முறையே உடையவர்.

774. சதுர்க₃தி: - பூசையின் ஏற்றத்தாழ்வுகளுக்கு இணங்க, இந்த்ரலோகம், ப்ரஹ்மபதம், கைவல்யம், மோக்ஷம் என்னும் நான்கையும் கொடுப்பவர்.

775. சதுராத்மா - அடியார்களின் ஏற்றத்தாழ்வுகளுக்கு இணங்க, விழிப்பு, கனவு, ஆழ்நிலை உறக்கம், முழு உணர்தல் ஆகிய நான்கு நிலைகளிலும் விளங்குபவர்.

776. சதுர்பா₄வ: - மேற்சொன்ன நான்கு நிலைகளிலும், நான்கு நான்காகப் பிரிந்து, பதினாறு செயல்களைப் புரிபவர்.



777. சதுர்வேத₃வித் - நான்கு வேதங்களை அறிந்தவர்களுக்கும் தம் பெருமேன்மையின் சிறு துளியே அறியும்படி இருப்பவர்.

778. ஏகபாத் - ஸ்ரீமந்நாராயணனான தன் பெருமையில் ஒரு பகுதியாலே கண்ணனாகப் பிறந்தவர்.

779. ஸமாவர்த்த: - இப்படி வ்யூஹத்திலும் அவதாரங்களிலும் திரும்பத்திரும்பப் பிறப்பவர்.

780. நிவ்ருத்தாத்மா - தன் கருணையேலேயே உலகத்தைச் செயல்படுத்தினாலும், எதோடும் ஒட்டுறவில்லாதவர்.

781. து₃ர்ஜய: - தானே வெளிப்பட்டாலே ஒழிய, நம் முயற்சியால் மட்டும் தெரிந்துகொள்ள முடியாதவர்.

782. து₃ரதிக்ரம: - தன் திருவடியே புகலானபடியால், யாராலும் அதைத் தாண்டிப்போக முடியாதவர்.

783. து₃ர்லப₄: - புலன்களை அடக்காதவர்களால் அடைய அரியவர்.

784. து₃ர்க₃ம: - வலிமையற்ற மனதுடையவர்களால் அடைய முடியாதவர்.

785. து₃ர்க₃: - அறிவின்மையாகிய மதிள் மூடுவதால் உள்ளே ப்ரவேசிக்க முடியாதவர்.

786. து₃ராவாஸ: - அவித்யை மறைக்கிறபடியால் பரமபதத்தில் வாஸத்தை எளிதாகக் கொடுக்காதவர்.

புத்தாவதாரம் — அஸுர நிக்ரஹம்

787. து₃ராரிஹா - புத்தராகப் பிறந்து தீயவர்களைக் கெடுத்தவர்.

788. ஶுபாங்க₃: - அஸுரர்க்கு மயங்கும்படிக்கு அழகிய உருவம் எடுத்தவர்.

789. லோகஸாரங்க₃: - அஸுர உலகுக்கு தாழ்ந்த உலக இன்பங்களைப் பற்றியே உபதேசித்துப் பின்பற்றச் செய்தவர்.



790. ஸுதந்து: - அஸுரர்களால் தாண்ட முடியாத வலிமையான பேச்சு வலையை உடையவர்.

791. தந்துவர்த₄ந: - அஸுரர்களுக்கு ஸம்ஸாரமென்னும் கயிற்றை வளர்த்தவர்.

792. இந்த்₃ரகர்மா - இந்திரனுக்குத் தீங்குசெய்யும் அஸுரர்களை அழித்தவர்.

793. மஹாகர்மா - அஸுரர்களை தண்டித்து, ஸாதுக்களைக் காக்கும் சிறந்த செயல்களை உடையவர்.

794. க்ருதகர்மா - அஸுரர்களை ஏமாற்ற தானும் அவர்களுடைய பொய்யான செயல்களை உடையவர்.

795. க்ருதாக₃ம: - தான் செய்ததை மெய்யாக்க ஆகமங்களை ஏற்படுத்தியவர்.

796. உத்₃ப₄வ: - முக்தியைப் பற்றி உபதேசிப்பதால் ஸம்ஸாரக்கடலைத் தாண்டியவர்போல் தோற்றமளிப்பவர்.

797. ஸுந்த₃ர: - அஸுரர்களைக் கவரும் அழகிய வடிவம் கொண்டவர்.

798. ஸுந்த₃: - தன் அழகால், அஸுரர்களின் உள்ளத்தை மென்மைப்படுத்துபவர்.

799. ரத்நநாப₄: - தான் மெத்தப்படித்தவன் என்பதைக் காட்டும் வயிற்றையும், ரத்தினத்தைப் போன்ற உந்தியையும் உடையவர்.

800. ஸுலோசந: - மயக்கும் கண்களை உடையவர்.

801. அர்க்க: - அஸுரர்களாலே மஹாத்மாவென்று துதிக்கப்பட்டவன்.

802. வாஜஸநி: - தன் நாஸ்திக உபதேசங்களால் அஸுரர்களை உலக இன்பத்திலே ஈடுபடுத்தி, அதிகமாக உண்ண வைத்தவர்.



803. ஶ்ருங்கீ₃ - அஹிம்ஸை வாதத்தை வலியுறுத்தி, கையில் மயில்தோகை கட்டு வைத்திருப்பவர்.

804. ஜயந்த: - அறிவே ஆத்மாவென்னும், உலகமே பொய்யென்றும் வீண்வாதம் செய்து ஆஸ்திகர்களை ஜயித்தவர்.

805. ஸர்வவிஜ்ஜயீ - தன் இனிய வாதங்களால் வேதங்களை நன்கு கற்றவர்களையும் மயக்கி வெற்றிகொண்டவர்.

806. ஸுவர்ணபி₃ந்து₃: - தன்னுடைய வாதத்திறமையால் ஆஸ்திகவாதத்தை மறைத்தவர்.

807. அக்ஷோப்₄ய: - ஆழ்ந்த கருத்துக்கள் உள்ளவரானபடியால் யாராலும் கலக்கமுடியாதவர்.

808. ஸர்வவாகீ₃ஶ்வரேஶ்வர: - வாதத்திறமைபடைத்த அனைவருக்கும் தலைவர்.

809. மஹாஹ்ரத₃: - பாவம் செய்தவர் மூழ்கும், புண்யம் செய்தவர் மறுபடியும் நீராட விரும்பும் ஏரி போன்றவர்.

810. மஹாக₃ர்த: - தன் உபதேசத்தினால் கெட்டுப்போனவர்களை தள்ளிவிடும் பெரும் குழிபோன்றவர்.

ஸாத்விகர்களுக்கு அருளுபவன்

811. மஹாபூ₄த: - சான்றோர்களால் பெருமை அறிந்து வணங்கப்படுபவர்.

812. மஹாநிதி₄: - பக்தர்களால் செல்வமாகக் கொள்ளப்படுபவர்.

813. குமுத₃: - இவ்வுலகத்திலும் அவ்வுலகத்திலும் பக்தர்களோடு சேர்ந்து மகிழ்பவர்.

814. குந்த₃ர: - பரதத்வமான தன்னைப்பற்றிய அறிவை அளிப்பவர்; குருக்கத்தி மலர்போல் தூய்மையானவர்.



815. துங்க$_3$: - அறிவு பற்றின்மை ஆகிய முன்படிகளில் ஏறியவர்களை பரபக்தி பரஜ்ஞானம் பரமபக்திகளாகிற மேல்படிகளில் ஏற்றுபவர்.

816. பர்ஜந்ய: - ஆத்யாத்மிகம் ஆதிதைவிகம் ஆதிபௌதிகம் என்னும் மூன்று வெப்பங்களையும் தணிக்கும் மேகம் போன்றவர்.

817. பாவந: - பக்தர்களிடம் காற்றைப்போல் செல்பவர்.

818. அநில: - பக்தர்களைத் தானே அருளுபவர்; யாரும் தூண்டத் தேவையில்லாதவர்.

819. அம்ருதாம்ஶூ: - தன் குணமென்னும் அமுதத்தை அடியார்களுக்கு ஊட்டுபவர்.

820. அம்ருதவபு: - அமுதத்தைப் போன்ற திருமேனி உடையவர்.

821. ஸர்வஜ்ஞ: - தன் பக்தர்களின் திறமை, திறமையின்மை, ஸாதிக்க முடிந்தது, முடியாதது, அனைத்தையும் அறிந்தவர்.

822. ஸர்வதோமுக$_2$: - இப்படித்தான் அடையவேண்டும் என்றில்லாமல் தன்னை அடைய பல வழிகள் உள்ளவர்.

823. ஸுலப$_4$: - விலைமதிப்பற்றவராக இருந்தும், அன்பெனும் சிறு விலையால் வாங்கப்படுபவர்.

824. ஸுவ்ரத: - எவ்வழியில் தன்னை அடைந்தாலும் அவர்களைக் காக்க உறுதி கொண்டவர்.

825. ஸித்$_3$த$_4$: - வந்தேறியாக அல்லாமல் இயற்கையாகவே காக்கும் தன்மை அமைந்தவர்.

826. ஶத்ருஜித் ஶத்ருதாபந: - சத்ருக்களை ஜெயித்தவர்களில் தம் சக்தியைச் செலுத்தி பகைவர்களுக்கு வெப்பத்தைக் கொடுப்பவர்.



827. ந்யக்₃ரோதோ₄து₃ம்ப₃ர: - வைகுந்தத்துக்குத் தலைவரான பெருமை படைத்தவர்; கைசுவப்புதாலேயே எளியவர்க்கும் அருளுபவர்.

எண்ணும் எழுத்தும்

828. அஶ்வத்த₂: - குறைவான காலத்திற்கு வாழும் இந்திரன் முதலான தேவர்கள் மூலம் உலகை நடத்துபவர்.

829. சாணூராந்த்₄ர நிஷூதந: - பகைவனான சாணூரன் என்னும் மல்லரை முடித்தவர்.

830. ஸஹஸ்ரார்சி: - தன்னுடைய ஒளியை ஸூர்யனுக்குக் கொடுப்பவர்.

831. ஸப்தஜிஹ்வ: - அக்னியாக ஏழு நாக்குகள் உடையவர்.

832. ஸப்தைதா₄: - ஏழு விதமான விரகுகளால் செய்யப்படும் யாகங்களை ஏற்பவர்.

833. ஸப்தவாஹந: - ஸூர்யனுடைய தேர்க்குதிரைகளான ஏழு சந்தஸ்ஸுகளை தனக்கு வாஹனமாக உடையவர்.

834. அமூர்த்தி: - (தம் பெருமைகளால்) மேற்சொன்ன அனைத்தையும் விட மேம்பட்டவர்.

835. அநக₄: - கர்மங்கள் எனும் குற்றம் தீண்டாதபடியால் ஜீவர்களைக்காட்டிலும் உயர்ந்தவர்.

836. அசிந்த்ய: - முக்தர்களோடும் ஒப்பிடமுடியாமல் உயர்ந்தவர்.

837. ப₄யக்ருத் - தன் ஆணையை மதிக்காதவர்களுக்கு பயமூட்டுபவர்.

838. ப₄யநாஶந: - ஆணையின்படி நடப்பவர்களுக்கு பயத்தைப் போக்குமவர்.



அஷ்ட ஐச்வர்யங்களை அருளுபவன்

839. அணு: - மிக நுண்ணியவர் (அணிமா).

840. ப்₃ருஹத் - மிகப்பெரிதான வைகுந்தத்தைவிட பெரியவர் (மஹிமா).

841. க்ருஶ: - எங்கும் தடையின்றி செல்லும்படி மிக லேசானவர் (லகிமா).

842. ஸ்தூ₂ல: - ஓரிடத்திலிருந்தே எல்லாப் பொருள்களையும் தொடும் அளவிற்குப் பருத்திருப்பவர் (கரிமா).

843. கு₃ணப்₄ருத் - தன் நினைவாலேயே, உலகையே தன் பண்பைப்போல எளிதில் தாங்குபவர் (ஈசித்வம்).

844. நிர்கு₃ண: - ஸத்வம், ரஜஸ் தமஸ் ஆகிய முக்குணங்கள் அற்றவர் (வசித்வம்).

845. மஹாந் - நினைத்ததை இடையூன்றி நடத்தவல்ல பெருமை உடையவர் (ப்ராகாம்யம்).

846. அத்₄ருத: - தடங்கலில்லாதவர்; கட்டுப்படாதவர் (ப்ராப்தி).

847. ஸ்வத்₄ருத: - ஏனையோர் முயற்சி செய்து அடையும் மேற்சொன்ன எட்டு சித்திகளும் இயற்கையிலேயே அமையப்பெற்றவர்.

848. ஸ்வாஸ்ய: - என்றென்றும் சிறந்த நிலையை உடையவர்; இன்று சிறப்படைந்த முக்தர்களை விட என்றுமே சிறப்பான நிலை உடையவர்.

ஜீவர்களை ஆளுபவன்

849. ப்ராக்₃வம்ஶ: - என்றுமே முக்தியில் இருக்கும் நித்யஸூரிகளுக்கும் ஆதாரமானவர்; இவர் நினைவாலேயே அவர்கள் நித்யர்களாக உள்ளார்கள்.



850. வம்ஶவர்த$_4$ந: - நித்யஸூரிகள் எனும் வம்சத்தை வளர்ப்பவர்.

851. பா$_4$ரப்$_4$ருத் - ஜீவர்கள் தன்னைச்சேரும் வரை அவர்களின் பொறுப்பைத் தாங்குபவர்.

852. கதி$_2$த: - முன்னால் சொல்லப்பட்டவை, இனி சொல்லப்படுபவை ஆகிய அனைத்து மங்களமான குணங்களும் பொருந்தியவராய் ஶாஸ்த்ரங்களில் போற்றப்பட்டவர்.

853. யோகீ$_3$ - சேராதவையையும் சேர்க்கும், நடக்காதவையையும் நடத்தும் பெருமை கொண்டவர்.

854. யோகீ$_3$ஶ: - யோகிகளுக்குத் தலைவர்; யோகத்தை நிறைவேற்றுபவர்.

855. ஸர்வகாமத$_3$: - யோகத்தில் நடுவே தவறினவர்களுக்கும் தகுந்த பலனைக் கொடுப்பவர்.

856. ஆஶ்ரம: - யோகத்தில் தவறியவர்களுக்கு திரும்பவும் அதைத் தொடரத் தகுதியான ஓய்விடத்தைக் கொடுப்பவர்.

857. ஶ்ரமண: - யோகத்தில் தவறியவர்களுக்கு விட்ட இடத்திலிருந்தே யோகத்தைத் தொடர வைப்பவர்.

858. க்ஷாம: - யோகத்தைத் தொடர விருப்பமுற்றவர்களுக்கும் ஸம்ஸார கடலைத் தாண்டும் வலிமை கொடுப்பவர்.

859. ஸுபர்ண: - யோகத்தைத் தொடர உதவிசெய்து ஸம்ஸாரத்திலிருந்து கரைசேர்ப்பவர்.

860. வாயுவாஹந: - பலமான காரணங்களால் யோகத்திலிருந்து நழுவினாலும் அவர்களை வேகமுள்ள கருடனைக் கொண்டு தூக்கிச்செல்பவர்.

861. த$_4$நுர்த$_4$ர: - பக்தர்களின் எதிரிகளை ஒழிக்க வில்லெடுத்திருப்பவர்.



862. த₄நுர்வேத₃: - தேவர்களும் அஸுரர்களும் வில்வித்தை கற்க அதற்குரிய ஶாஸ்த்ரத்தை வெளியிட்டவர்.

தீயவர்களுக்கு யமன்

863. த₃ண்ட₃: - தகுதியான அரசர்களைக்கொண்டு தீயவர்களை தண்டித்து தர்மத்தை நிலைநிறுத்துபவர்.

864. த₃மயிதா - தானே நேராகவும் இராவணன் முதலானோரை அடக்குமவர்.

865. அத₃ம: - தான் யாராலும் அடைக்கப்படாதவர்.

866. அபராஜித: - யாராலும் எங்கும் எப்போதும் எதனாலும் வெல்லப்படாதவர்.

867. ஸர்வஸஹ: - சிறு பலன்களுக்காக வேறு தேவதைகளைத் தொழுபவர்களையும் பொறுப்பவர்.

868. நியந்தா - மற்ற தேவர்களைத் தொழுபவர்களையும் ஊக்குவிப்பவர் (இறுதியில் அவர்கள் தம்மை அடையக் காத்திருப்பவர்).

869. நியம: - வேறு தேவதைகளிடம் நீண்ட ஆயுள் ஆகியவற்றை வேண்டினாலும், அந்த தேவதைகளுக்கு அந்தராத்மாவாக இருந்து, பலனைத் தானே கொடுப்பவர்.

870. யம: - தேவர்களுக்கு வரம் அளிக்கும் வலிமையைத் தந்து நடத்துபவர்.

ஸத்வ குணத்தை வளர்ப்பவன்

871. ஸத்வவாந் - கலப்பில்லாத ஶுத்த ஸத்வகுணத்தை உடையவர்.



872. ஸாத்விக: - ஸத்வகுணத்தின் பலனான அறம், அறிவு, பற்றின்மை, செல்வம் ஆகியவற்றின் உருவமாகவே இருப்பவர்.

873. ஸத்ய: - ஸாத்விகமான ஶாஸ்த்ரங்களால் போற்றப்படும் உண்மையான புகழாளர்.

874. ஸத்யத₄ர்மபராயண: -ஸாத்விகமான தர்மத்தை நாம் அநுஷ்டிப்பதனால் மகிழ்பவர்.

875. அபி₄ப்ராய: - ஸாத்விக தர்மங்களைக் கடைப்பிடிப்பவர்களால் விரும்பப்படுபவர்.

876. ப்ரியார்ஹ: - தன்னையே விரும்புவர்களிடம் பேரன்பு கொண்டவர்.

877. அர்ஹ: - தன்னையே அடைய விரும்பும் பக்தர்களுக்கு தகுந்தவர்.

878. ப்ரியக்ருத் - வேறு பயன்களை விரும்புவோர்க்கு அவற்றைக் கொடுத்து, இறுதியில் தம்மிடத்தில் விருப்பத்தை வளர்ப்பவர்.

879. ப்ரீதிவர்த₄ந: - தன்னுடைய இனிமையான குணங்களால் பக்தியை வளர்த்து தம்மிடம் ஈடுபடுத்துபவர்.

880. விஹாயஸக₃தி: - பக்தர்கள் பரமபதத்தை அடைவதற்கு தாமே வழியாக இருப்பவர்.

நெடுங்கால ஆசை — அர்ச்சிராதி மார்க்கம்

881. ஜ்யோதி: -மீளுதலில்லாத வைகுந்தத்திற்குச் செல்லும் அர்ச்சிராதி மார்க்கத்தில் முதற்படியான ஒளியாய் இருப்பவர்.

882. ஸுருசி: - ஸுர்ய ஒளியால் ப்ரகாசிக்கும் பகலாக இருப்பவர் (இரண்டாம் படி).



883. ஹுதபுக்விபு: - ஹோமப்பொருட்களை உண்ணும் சந்திரனின் வளர்பிறையாய் இருப்பவர் (மூன்றாம் படி).

884. ரவி: -ஸுர்யம் ப்ரகாசிப்பதால் சிறந்ததான உத்தராயனமாக இருப்பவர் (நான்காம் படி).

885. விரோசந: - கதிரவன் உத்தராயனம் தக்ஷிணாயனம் ஆகியவற்றில் ப்ரகாசிக்கும் ஸம்வத்ஸரமாக (ஆண்டாக) இருப்பவர் (ஐந்தாம் படி).

886. ஸூர்ய: - எங்கும் வீசும் காற்றாக இருப்பவர் (ஆறாம் படி).

887. ஸவிதா - மழையையும் பயிரையும் வளர்க்கும் ஸூர்யனாக இருப்பவர் (ஏழாம்படி).

888. ரவிலோசந: - சந்திரன், மின்னல், வருணன் ஆகியவர்களுக்கு ஒளியூட்டுபவர் (எட்டு, ஒன்பது, பத்தாம்படி).

889. அநந்தஹுதபுக்போக்தா: - யாகத்தில் ஸமர்ப்பிக்கப்படுவதை ஏற்கும் இந்த்ரனாகவும், ஜீவர்களைக் காக்கும் நான்முகனாகவும் இருப்பவர் (பதினொன்று, பன்னிரண்டாம் படி).

890. ஸுகத: - அமானவனால் தீண்டப்பட்டு ஸம்ஸாரம் ஒழிந்து தம்மை அடையும் ஜீவனுக்கு இன்பத்தை அளிப்பவர்.

891. நைகத: - பல அப்ஸரஸ்ஸுக்கள் இந்த முக்தனை அலங்கரித்து தம்மிடம் சேர்க்கும்படிச் செய்பவர்.

நலம் அந்தமில்லாத நாடு

892. அக்ரஜ: - முக்தியடைந்தவர் அநுபவிக்கும்படி கம்பீரமாக அவன் முன் தோன்றுபவர்.



893. அநிர்விண்ண: - ஜீவனை ஸம்ஸாரத்திலிருந்து அவனைப்பற்றிய கவலை இல்லாதவர்.

894. ஸதாமர்ஷீ - முக்தன் செய்யும் தொண்டுகளைப் பெருமையோடு ஏற்பவர்.

895. லோகாதிஷ்டாநம்: - முக்தர்கள் இன்பம் துய்க்கும் உலகத்திற்கு ஆதாரமானவர்.

896. அத்புத: - முக்தர்கள் எக்காலத்திலும் அநுபவித்தாலும் காணாதது கண்டதுபோல் வியப்பாக இருப்பவர்.

897. ஸநாத் - முக்தர்களால் பங்கிட்டு போற்றி அநுபவிக்கப்படுபவர்.

898. ஸநாதநதம: - பழையவராயினும் புதியதாகக் கிடைத்தவர்போல் ஈடுபடத்தக்கவர்.

899. கபில: - பளிச்சிடும் மின்னலுக்கு இடையே கறுமேகத்தைப்போல் இருப்பவர்: வைகுந்தம் / மஹாலக்ஷ்மி = மின்னல், பகவான் = மேகம்.

900. கபிரவ்யய: - குறைவற்ற மகிழ்ச்சியை அநுபவிப்பவர்.

901. ஸ்வஸ்தித: - மங்களங்களைக் கொடுப்பவர்.

902. ஸ்வஸ்திக்ருத் - தன் மங்களமான குணங்களை அநுபவிக்கக் கொடுப்பவர்.

903. ஸ்வஸ்தி: - தானே மங்களவடிவமாக இருப்பவர்.

904. ஸ்வஸ்திபுக் - மங்களங்களின் ஊற்றுவாயைக் காப்பவர்.

905. ஸ்வஸ்திதக்ஷிண: - தமக்குத் தொண்டுபுரியும் முக்தர்களுக்கு திவ்யமான திருமேனி, சக்தி ஆகியவற்றை தக்ஷிணையாக அளிப்பவர்.

906. அரௌத்ர: - கல்யாணகுணங்களின் குளிர்ச்சியால் கடுமையில்லாமல் இருப்பவர்.



907. குண்ட$_3$லீ - தன் திருமேனி அழகுக்கேற்ற குண்டலங்களை (காதணிகளை) அணிந்தவர்.

908. சக்ரீ - ஸுதர்ஶன சக்ர ஆயுதத்தை ஏந்தியவர்.

909. விக்ரமீ - கம்பீரமான இனிய விளையாட்டுக்கள் கொண்டவர்.

910. ஊர்ஜிதஶாஸந: - நான்முகன் இந்திரன் முதலியோரால் மீறமுடியாத கட்டளை படைத்தவர்.

911. ஶப்தா$_3$திக$_3$: - ஆயிரம் நாக்கு உடைய ஆதிஶேஷன் போன்றோர்களாலும் பேச முடியாத மஹிமை உடையவர்.

கஜேந்த்ர மோக்ஷம்

912. ஶப்த$_3$ஸஹ: - தெளிவில்லாத சொற்கள் பேசும் ப்ராணிகளின் வேண்டுதல் ஒலியையும் ஏற்பவர்

913. ஶிஶிர: - கஜேந்த்ரனின் கூக்குரல் கேட்டவுடன் மிகவிரைவகச் சென்றவர்.

914. ஶர்வரீகர: - பகைவர்களை அழிக்கும் ஐந்து ஆயுதங்களை ஏந்திக்கொண்டு விரைந்தவர்.

915. அக்ரூர: - கையில் ஆயுதங்கள் இருந்தும் உடனே முதலையைக் கொல்லும் கடுமை இல்லாதவர்.

916. பேஶல: - கருடன்மேல் விரைந்தபோது ஆடையும் ஆபரணமும் கலைந்ததே பேரழகாக விளங்கியவர்.

917. த$_3$க்ஷ: - ஆனையைக்காக்க மடுக்கரைக்கு விரைந்தவர்.

918. த$_3$க்ஷிண: - விரைந்து வந்திருந்தும் "நான் தள்ளியிருந்து நேரங்கடத்திவிட்டேனே! வெட்கப்படுகிறேன்" என்று அன்புடன் மொழிந்தவர்.

919. க்ஷமிணாம் வர: - பொறுமை உள்ளவர்களில் சிறந்தவர்; யானையைக் கண்டபின்பே பதட்டம் நீங்கி, பொறுமை அடைந்தவர்.



920. வித்3வத்தம: - சிறந்த அறிவாளி; யானையின் துன்பத்தை தன் கைகளால் தடவிக்கொடுத்துப் போக்கத் தெரிந்தவர்.

921. வீதப4ய: - தன் வேகத்தாலேயே கஜேந்த்ரனின் பயத்தைப் போக்கியவர்.

922. புண்யஶ்ரவணகீர்த்தந: - கஜேந்த்ரமோக்ஷத்தை கேட்டாலும் சொன்னாலும் பாவங்களை நீக்குபவர்.

922. உத்தாரண: - யானையையும் முதலையையும் குளத்திலிருந்து கரையேற்றியவர்.

924. து3ஷ்க்ருதிஹா - தீயதான முதலை கறையேறியபிறகு அதை அழித்தவர்.

925. புண்ய: - இந்த புண்ணியகதையைப் பாடும் நம்மைத் தூய்மைப்படுத்துபவர்.

926. து3ஸ்ஸ்வப்நநாஶந: - இதைக்கேட்பவர்களுக்குக் கெட்ட கனவைப் போக்குபவர்.

927. வீரஹா - கஜேந்த்ரனின் பகைவனை (முதலை, ம்ருத்யு) அழித்தவர்.

928. ரக்ஷண: - இன்சொற்களாலும் தொட்டும் தழுவியும் கஜேந்த்ரனைக் காத்தவர்.

929. ஸந்த: - இப்படி தன் அடியார்களுக்காக இருப்பவர்; அவர்கள் விருப்பத்தை நிறைவேற்றி பக்தியை வளர்ப்பவர்.

930. ஜீவந: - (ஹூஹூ என்னும் கந்தர்வன் தேவல முனிவரின் சாபத்தால் முதலையாக இருந்தான்.) தன்னால் கொலையுண்ட முதலையை கந்தர்வனாக்கி வாழ்வித்தவர்.

931. பர்யவஸ்தி2த: - தன் அன்பினால் கஜேந்த்ரனைச் சூழ்ந்தவர்.

932. அநந்தரூப: - பக்தர்களைக்காக்க பல வடிவங்களை எடுப்பவர்.



933. அங்கஶ்ரீ: - தன் பக்தர்களுக்கு அளிக்க, உலக இன்பம் முதல் தன்னை அடைவது வரை அனைத்துச் செல்வங்களும் உடையவர்.

934. ஜிதமந்யு: - கோபத்தையே வென்றவர்; முதலைக்கும் நற்கதி அளித்தவர்.

935. ப₄யாபஹ: - இந்த வரலாற்றைக் கேட்டவர்களுக்கு "என்னைக் காக்கத் தலைவன் இல்லையே" என்ற பயத்தைப் போக்குபவர்.

936. சதுரஸ்ர: - பக்தர்களுக்காகப் பதறினாலும், அவன் வேண்டுகோளைத் திறமையுடன் முடித்தவர்.

937. க₃பீ₄ராத்மா: - தேவர்களும் அறியவொண்ணாத ஆழமான தன்மை கொண்டவர்.

938. விதி₃ஶ: - தேவர் முதலானோரின் தழுதழுத்த துதிக்கும் எட்டாத மஹிமை உள்ளவர்.

939. வ்யாதி₃ஶ: - அந்தந்த தேவர்களுக்குரிய பதவியைக்கொடுத்து கடமையாற்றச் செய்பவர்.

940. தி₃ஶ: - தேவர்களுக்கு ஈனானவர்; யானையிடம் பாசம் வைத்தவர்.

941. அநாதி₃: - விலங்கான யானைக்குத் தம்மையே தந்தவர்; ஆனால் தேவர்களுக்குத் தாழ்ந்த பலனைக் கொடுப்பவர்.

942. பூ₄ர்பு₄வ: - பகவானுக்கு அடியவன் நான் என்றுணர்ந்த தூயவனுக்கு சிறந்த அடையுமிடமானவர்.

943. லக்ஷ்மீ: - பக்தர்களுக்குச் செல்வமாக இருப்பவர்.

944. ஸுவீர: - பக்தர்களின் ஆபத்தைப்போக்கும் சிறந்த சக்தி உடையவர்.

945. ருசிராங்க₃த₃: - அடியார்கள் கண்டு களிக்கத் தன் அழகான திருமேனியைக் கொடுப்பவர்.



அவதாரத்துக்கும் திருவிளையாடல்களுக்கும் பயன்

946. ஜநந: – அறிவு மழுங்கிய ஜீவர்களுக்கும், தன்னை அடைவதற்காகத் தகுந்த உடலைக்கொடுத்து பிறப்பிப்பவர்.

947. ஜநஜந்மாதி₃: – மக்களின் பிறவிக்குத் தானே பயனாக இருப்பவர்; பெருமானை அடைவதே பிறவிப்பயன்.

948. பீ₄ம: – இப்படிப்பட்ட அருளை விரும்பாதவர்களை நரகம் முதலான துன்பங்களால் பயப்படுத்துபவர்.

949. பீ₄மபராக்ரம: – உலகிற்குத் தீங்குசெய்யும் அஸுரர்களுக்கு அச்சம்தரும் பேராற்றலுடையவர்.

950. ஆதா₄ரநிலய: – தர்மத்தால் உலகைத்தாங்கும் ப்ரஹ்லாதன் போன்ற ஸாதுக்களுக்கு ஆதாரமானவர்.

951. தா₄தா – தானே தர்மத்தை உபதேசிக்கும் ஆசார்யனாகவும், அதைக் கடைப்பிடிக்கும் முன்னோடியாகவும் இருப்பவர்.

952. புஷ்பஹாஸ: – தன்னை அநுபவிக்கும் திறன் உள்ளவர்களுக்கு மாலைப்பூவைப்போல் மலர்ந்திருப்பவர்.

953. ப்ரஜாக₃ர: – உழவன் பயிரைக்காப்பதுபோல் உறங்காமல் இரவும் பகலும் அடியார்களைக் காப்பவன்.

954. ஊர்த்₄வக₃: – (தாழ்ந்தோரைக்காக்க இவர் விழித்திருக்க வேண்டுமா?) இவரே அனைவரையும்விட உயர்ந்தவர். ஆகையால் கடமை உணர்வோடு விழித்திருக்கிறார்.

955. ஸத்பதா₂சார: – தொண்டுபுரியும் நல்வழியில் பக்தர்களை ஈடுபடுத்துபவர்.

956. ப்ராணத₃: – உலக இன்பமென்னும் விஷத்தால் தீண்டப்பட்டவர்களுக்கு உயிர் கொடுப்பவர்.

957. ப்ரணவ: – தனக்கும் ஆத்மாக்களுக்குமுள்ள உறவை ப்ரணவத்தினால் (ஓங்காரத்தினால்) அறிவிப்பவர்.



958. பண: - தான் தலைவனாக, ஜீவன் தொண்டனாக இருக்கும் நிலையை, பேரன்புவயப்பட்டு மாற்றி, தானே பக்தர்களுக்குத் தொண்டனாக இருந்து, கொடுக்கல் வாங்கல் செய்பவர்.

959. ப்ரமாணம் - உண்மையான அறிவைக் கொடுக்கும் கருவியே ப்ரமாணம். வேத ப்ரமாணத்தின் மூலம் ஐயமில்லாத அறிவை அளிப்பவர்.

960. ப்ராணநிலய: - பறவைகளுக்கு ஶரணாலயம்போல், அனைத்து ஆத்மாக்களுக்கும் இருப்பிடம்.

961. ப்ராணத்₄ருத் - அந்த ஜீவர்களைத் தாய்போல் தாங்கிப் பேணுபவர்.

962. ப்ராணஜீவந: - ஆத்மாக்களை உணவும் தண்ணீரும்போல் இருந்து வளர்ப்பவர்.

963. தத்வம் - தயிரில் வெண்ணைபோல், சித்துக்கள் அசித்துக்கள் ஆகியவற்றின் ஸாரமாக இருப்பவர்.

964. தத்வவித் - தம்மைப்பற்றிய உண்மையை தாமே அறிந்திருப்பவர்.

965. ஏகாத்மா - உலகில் ஒரே ஆத்மாவாய் இருப்பவர்; அதாவது, இவர் ஒருவரே உலகுக்குத் தலைவராகவும், அநுபவிப்பவராகவும், நன்மையை விரும்புபவராகவும் உள்ளார்.

966. ஜந்மம்ருத்யுஜராதிக₃: - ஆயினும், பிறப்பு இறப்பு மூப்புகளின் சுழலைக் கடந்தவர்.

967. பூ₄ர்பு₄வஸ்வஸ்தரு: - பூ: புவ:, ஸுவ: ஆகிய மூவுலகங்களில் உள்ளோர்.

968. தார: - அவர்களை ஸம்ஸாரக் கடலைத் தாண்டுவிப்பவர்; கப்பல் போன்றவர்.

969. ஸவிதா - அனைவரையும் தந்தையைப்போல் பிறப்பிப்பவர்.

970. ப்ரபிதாமஹ: - அனைவருக்க பாட்டனாராகப் புகழ்பெற்ற நான்முகனுக்கே தந்தை.



## வேள்வியும் பயனும்

971. யஜ்ஞ: – பொருளைக்கொண்டு யஜ்ஞம் செய்ய ஆற்றல் இல்லாதவர்களுக்கு ஜபயஜ்ஞமாய் இருப்பவர்.

972. யஜ்ஞபதி: – யஜ்ஞத்திற்குப் பலனைக் கொடுப்பவர்.

973. யஜ்வா – ஆற்றலில்லாதவர்களுக்காக, தானே யஜமானனாக இருந்து யாகம் செய்பவர்.

974. யஜ்ஞாங்க$_3$: – சக்தி உள்ளவர்கள் செய்யும் யாகங்களும் தனக்குக் கீழ்ப்பட்டிருக்கும்படிச் செய்பவர்.

975. யஜ்ஞவாஹந: – யாகம் செய்ய இன்றியமையாதவையன திறல், ஈடுபாடு, தகுதி ஆகியவற்றைக் கொடுத்து, யாகத்தை நடத்துபவர்.

976. யஜ்ஞப்$_4$ருத் – யாகத்தில் குறைகள் இருந்தாலும், தம்மை நினைத்துச்செய்யப்படும் பூர்ணாஹுதியால், அதை முழுமையடையச் செய்பவர்.

977. யஜ்ஞக்ருத் – உலகநன்மைக்காக ஸ்ருஷ்டி தொடங்கியபோது யாகத்தைப் படைத்தவர்.

978. யஜ்ஞீ – அனைத்து யாகங்களும் இவரைக்குறித்தே செய்யப்படுகிறபடியால் யாகங்களுக்குத் தலைவர்.

979. யஜ்ஞபுக் – யஜ்ஞத்திலே கொடுக்கப்படும் ஆஹுதியை அனுபவிப்பவர்; அல்லது, யஜ்ஞத்தைக் காப்பவர்.

980. யஜ்ஞஸாத$_4$ந: – 'பெருமானே அடையத்தகுந்தவர்' என்னும் அறிவே யஜ்ஞத்தைத் தூண்டும் கோலாக உள்ளவர்.

981. யஜ்ஞாந்தக்ருத் – யாகத்தின் முடிவான பயன், 'பெருமானை அடைவதே சிறந்த பயன்' என்றும் அறிவு. இந்த அறிவைப் புகட்டுமவர்.



982. யஜ்ஞகு$_3$ஹ்யம் - யாகத்தின் ரஹஸ்யமாய் இருப்பவர்; 'பூர்ணரான பகவான் யாகத்தில் கொடுக்கப்படும் பொருட்களை எதிர்ப்பார்த்து, ஏற்று, த்ருப்தி அடைவதுபோல் நடிக்கிறார்' என்னும் ரஹஸ்யத்தை மெய்யன்பர்களே அறிவார்கள்.

தேவகீநந்தநன்

983. அந்நம் - அவன் அருள் பெற்ற மெய்யன்பர்களாலே அந்நத்தைப்போல் (உணவைப்போல்) அனுபவிக்கப்படுபவர்.

984. அந்நாத$_3$: - தம்மை அனுபவிப்பவர்களை தாம் அனுபவிப்பவர்.

985. ஆத்மயோநி: - சர்க்கரையும் பாலும் கலப்பதுபோல் தன்னை அநுபவிப்பவர்களை தம்மிடம் சேர்ப்பிப்பவர்.

986. ஸ்வயம்ஜாத: - யாருடைய வேண்டுதலும் இல்லாமல், தன் இச்சைப்படி பூவுலகில் பிறப்பவர்.

987. வைகா$_2$ந: - அவதரித்து தன் அடியார்களின் துன்பத்தைப் போக்குபவர்.

988. ஸாமகா$_3$யந: - முக்தியடைந்தவர்களால் வைகுந்தத்தில் ஸாமவேதம்கொண்டு பாடப்படுபவர்.

989. தே$_3$வகீநந்த$_3$ந: - மேற்சொன்ன பெருமைகள் எல்லாம் வைகுந்தநாதனுக்கு மட்டும் அல்ல. தேவகியின் மைந்தனதே.



990. **ஸ்ரஷ்டா** - கண்ணனே ப்ரபஞ்சத்தைப் படைப்பவர்.

991. **க்ஷிதீஶ:** - பூமிக்குத் தலைவர்; இவர் அனைத்துக்கும் தலைவரானாலும், பூமியின் சுமையைக் குறைக்கவே கண்ணனாகப் பிறந்தபடியால் பூமிக்கே தலைவர்.

992. **பாபநாஶந:** - தயிர் வெண்ணை திருடியது, ராஸக்ரீடை முதலான கதையமுதத்தைக் கேட்பவர்களின் பாபத்தை ஒழிப்பவர்.

ஆயுதமே ஆபரணம்; கண்ணுள் நின்று அகலாத திருவுருவம்

993. **ஶங்க$_2$ப்$_4$ருத்** - பரம்பொருளுக்கு அடையாளமான சங்கத்தைக் கைகளில் ஏந்தியவர்; தன் வாயமுதைக் கொடுத்து அத்தைப் பேணுபவர்.

994. **நந்த$_3$கீ** - தனக்கு மகிழ்ச்சியூட்டும் நந்தகம் என்னும் வாளை ஏந்தியவர்.

995. **சக்ரீ** - தன் அடியார்களான தேவர்களின் பகைவர்களை அழிக்கும் ஸுதர்சன சக்ரத்தைத் தாங்குபவர்.

996. **ஶார்ங்கத$_4$ந்வா** - நாணொலியால் உலகை நடுங்கச்செய்யும் சார்ங்கமென்னும் வில்லைப் பிடித்தவர்.

997. **க$_3$தா$_3$த$_4$ர:** - ஊழிக்காலத்தைப்போல் நெருப்பைக்கக்கி பகைவர்களை அழித்து, அடியார்களுக்கு இன்பம் கொடுக்கும் கௌமோதகீ என்னும் கதையை ஏந்தியவர்.

998. **ரதா$_2$ங்க$_3$பாணி:** - தேரின் ஓர் பகுதிபோல் இருக்கும் சக்கர ஆயுதத்தை தயார் நிலையில் பிடித்திருப்பவர்.



999. அக்ஷோப்⁴ய: - தன்னிடம் சரணாகதி செய்தவர்களுக்கு அபயம் கொடுப்பதாகிய உறுதியிலிருந்து அசைக்கமுடியாதவர்.

1000. ஸர்வப்ரஹரணாயுத₄: - அடியார்களின் துன்பம் போக்கி, இன்பம் கொடுக்கும் எண்ணிறந்த (ஆபரணத்துக்கொப்பான) ஆயுதங்களை தரித்தவர்..

இப்படி ஆயிரம் திருநாமங்களால் ஸ்ரீமந்நாராயணனே புருஷோத்தமன், திருமகள் கேள்வன், சரணாகதர்களுக்கு உயிரளிக்கும் மருந்தாய் இருப்பவன், எல்லையில்லாத மங்களமான இயற்கை நிலை, வடிவம், பண்புகள், திருவிளையாடல்கள், மேன்மை, எளிமை ஆகியவற்றை உடையவன், இடுக்கண் களையும் நண்பன், தன் அடியார்கள் வேண்டுபவற்றையெல்லாம் கொடுக்கும் வள்ளல் என்று போற்றப்படுகிறான். ஆயிரம் நாமங்களைச் சொல்பவர், செங்கண் திருமுகத்துச் செல்வத் திருமாலால் எங்கும் திருவருள்பெற்று இன்புறுவர்.

**வநமாலீ கதீ₃ ஶார்ங்கீ₃ ஶங்கீ₂ சக்ரீ ச நந்த₃கீ |**
**ஶ்ரீமாந் நாராயணோ விஷ்ணு: வாஸுதே₃வோ பி₄ரக்ஷது ||**